குமரன்

ஆரம் 13, முத்து 25

February 27, 1936

Record no. 313

*Kumaraṉ*

*Āram 13, muttu 25*

*February 27, 1936*

Record no. 313

REG. NO. M. 1823. 20 பக்கங்கள். KUMARAN WEEKLY

சந்தா விவரம்

உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5—0—0
ஆறு மாதம் 3—0—0
ஸிலோன், பர்மா வருஷம் ஒன்றுக்கு ரூ. 6—0—0
மலாய் முதலிய வெளிநாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 7—0—0

# குமரன்

விளம்பரம்.

நோட்டீஸ், லோக்கல் விளம்பரம் முதலியவைகளுக்கு இஞ்ச் ஒன்றுக்கு ரூ. 2-0-0
வியாபார சம்பந்தமானது ரூ. 0-12-0
ஒப்பந்த விளம்பரத்துக்கு மானேஜருக்கு எழுதவும்.

(மாதப்பதிப்பும் சேர்ந்தது.)

வியாழன் தோறும் வெளிவரும்.

PUBLISHED EVERY THURSDAY.

ஆசிரியர்:— சொ. முருகப்பா.

ஆரம் 13. காரைக்குடி, யுவ-ஞு மாசி-மீ 15௳ (27—2—36.) முத்து 25.

# "தமிழருக்குத் தாங்கமுடியா அவமானம்"

## பண்டைத் தமிழருக்கு கற்பில்லையா?

## இழிவுபடுத்தும் ஆராய்ச்சி நூல்

அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் போராசிரியரும், தமிழ்ப்பிரிவின் தலைவரும் ஆகிய ஸ்ரீ எஸ். சோமசுந்தர பாரதியார் எம். ஏ., பி. எல்., எழுதியதாவது:—

சென்னைத் தமிழ் பேரகாதி நிலயத்துப் பண்டிதராகிய ஸ்ரீ மு. இராகவய்யங்கார் தாம் எழுதியுள்ள "தொல்காப்பியப் பொருளதிகார வாராய்ச்சி என்னும் நூலில் தமிழரைப் பகிரங்கமாக இழிவுபடுத்திக் கூறியுள்ளார். அந்நூலில் இப்பகுதியை 8 முதல் 11 பக்கங்களுக்குள் காணலாம். மிகக் கேவலமானதும், பொறுமை இழக்கச் செய்வதும், முற்றிலும் தவறானதுமாகிய இக்கூற்றுவது:—

"பண்டைத்தமிழர்க்குள் ஒழுங்கான மணமுறை இல்லை; நினைத்தவன் நினைத்தவளை நினைத்தபடி அவள் விருப்பத்திற்கு மாறாக அவள் சுற்றமறியாவகை வலிந்து சென்று கூடி ஒழுகிவந்தான். இத்தகைய களங்கம் நிறைந்த களவு முறையை நீக்கி ஆரிய மேலோர் கரணங்கள் அமைந்த கற்பியல் முறையைத் தமிழ்நாட்டாருக்கு நன்கு விதித்துப் போந்தனர்" என்பதே. ஸ்ரீ அய்யங்கார் இப்பழியைத் தகுந்த ஓர் உதாரணங் கொண்டோ அல்லது குறிப்பிட்ட ஒரு தமிழ்நாட்டுப் பகுதியாரைப் பற்றியோ வகுப்பாரைப் பற்றியோ கூறுவர். இவர் கூற்று தமிழ்நாட்டு எல்லாத் தமிழர்களையும் ஒரே படியாக இழிவுபடுத்தியுள்ளது.

### மாறான கூற்று

இவர் கூற்றுக்கு மாறாக இவரே தம்முடைய நூலில் தமிழ்நாட்டு எல்லா வகுப்பு மக்களும் மனமொத்த மணமுறையைக் கையாண்டு வந்தனர் என்று வரைந்துள்ளார். அங்ஙனமிருக்க இவ்விதக் குதர்க்கம் என் இடை நுழைந்தது என்று புரியவில்லை. இதற்கு இவர் காணுமாதாரம் காண்போர் நகைக்கத்தக்கது. அஃதாவது:- "இங்ஙனம் பண்டைய தமிழ் மணமுறை மிகவும் பரிசுத்தமுடையதாக எல்லாத்தமிழ்நூல்கள்புனைந்து கூறியிருப்பினும், உலகவழக்கானது அதனினும்வேறுபட்டுவழங்கியிருத்தலும்கூடியதேயாம்" என்பதே. இங்ஙனம் வழங்கியதாற்றான் நாகரீகத்திற் சிறந்த வாரியமேலோர் தமது புராதன முறை யொன்றில் நின்று ஒழுகிவந்த தமிழர்க்குக் கற்பியல் முறை நன்கு விதித்துப் போந்தனர் என்று கூறுகின்றார் ஐயங்கார்.

### ஒழுக்கக் குறைவிற்கு அறிகுறி!

இல்லாததை "இருக்கக் கூடியதே" என்று தகுந்த காரணம் சிறிதுமல்லாமல் அபார புத்திசாலித்தனமாக எழுதிவிட்டதாக நினைக்கும் நமது பண்டிதரை நினைக்க இம்முறையில், இவர் உடன் பிறந்தாராக நினைக்கக்கூடிய வேறொரு நண்பர் நினைவு எனக்கு எழுகின்றது. அப்பெரியார் "தமிழில் அளவுகடந்த வியக்கத்தக்க நீதி நூல்கள், ஒழுக்க நூல்கள் இருப்பது தமிழரின் ஒழுக்கக் குறையைக் காட்டுகின்றது" என்று கூறியுள்ளார். ஆனல் நண்பர் எம். சினிவாச ஐயங்கார் கூறிய இந்த அற்பத்தனமான பொறுத்தமற்ற கூற்று, தமிழரின் தூய உணர்ச்சியையையும், ஒழுக்கத்தையும், பொதுவாக மனித சமூகத்தையும் பாதிக்கத் தக்கவாறு தமது முழு அகம்பாவத்தையும், ஆணவத்தையும் நன்கு விரித்துக் காட்டித் தமிழரை இழிவுபடுத்தியுள்ள நண்பர் மு. இராகவய்யங்கார் கூற்றைவிட மத்திபம் என்றே சொல்லலாம். நண்பர் சினிவாசய்யங்கார் தாம் ஒரு தமிழ்ப் புலவர் என்று நடித்ததில்லை. அவர் நூல்கள் ஆங்கிலம்தெரியாத் தமிழ் மக்களுக்கு எட்டா வகையில் ஆங்கிலத்தில் தமிழரைப்பற்றிக் குறைந்தவளவு இழிவுபடுத்தி வரையப்பட்டவை. ஆனல் நண்பர் மு. இராகவய்யங்கார் தாமொரு சிறந்த தமிழ்ப் பண்டிதர் என்று உரிமை பாராட்டுகிறார். ஒவ்வொரு தமிழன் உள்ளத்திலும் பொறுக்கமுடியா வெறுப்பையும், கொதிப்பையும் உண்டாக்கும் முறையில் தமிழர் சமூகத்தையே இழிவுபடுத்தியுள்ளார். இங்ஙனம் இழிவுபடுத்திக் கூறும் இக்கூற்று, பெருத்த ஒரு சமூகத்தை மிகவும் உச்ச நிலையிலிருந்து பாதிக்கத் தக்கதன்றோ? இக் கூற்று முழு பொய்யாக இருப்பதோடு தமிழர்க்கு மான நஷ்டத்தை விளைவிப்பதாகவும் இருக்கிறது. இந்த நவலைத் தொடர்ந்தார்ப் போல அவரிடத்தில் அறிவித்தும் அவர் அதைத் திருத்திக் கொள்ளாததும், திருத்திக் கொள்ள முன்வராததும் உண்மையில் வருத்தத்தற் குரியன. எனவே நாம் மெல்ல முடியாத பொருளை அதிகமாக வாயில் போட்டுக் கொண்டதாகவோ அல்லது தான் விழுங்கக் கூடியதைவிட அதிகமாக மென்று விட்டதாகவோ அவரை உணரும்படி விட்டு விடுவதே நாம் செய்யற்பாலது.

### ஏன் கண்டிக்க முன்வரவில்லை?

ஆனல், தங்களுடனுறையும் தமிழ்ச் சமூகத்தாரை இங்ஙனம் இழிவுபடுத்தி தம்மினத்தவர் கூறியுள்ளதை அறிவு படைத்த பார்ப்பனச் சகோதரருள் ஒருவரேனும் கண்டிக்க முன்வரவில்லையே எனப் பொதுமக்கள் வியப்படையலாம். எந்த மூலையிலிருந்தாவது எந்த ஒரு பார்ப்பனரல்லாதாராவது ஒரு பார்ப்பனரை எங்காவது இழித்துக் கூறியதாகக் கண்டாலோ—கேட்டாலோ போதும்; உடனே எல்லாப் பார்ப்பனரும் ஒருமிக்க எழுந்து கூப்பாடு போடுவதும், வகுப்புவாதம் என்பதுவும், தூய தேசபக்தர் போல் பத்திரிகைகளில் எழுதப்பட்டிருப்பதும் வழக்கமாகிவிட்டது. ஆனல் ஒரு தமிழனையல்ல, தமிழரில் குறிப்பிட்ட ஒரு பிரிவினரையல்ல, தமிழ்நாட்டிலுள்ள எல்லாத் தமிழர்களையும் இழிவுபடுத்திக் கூறியுள்ள ஸ்ரீ. இராகவய்யங்கார் நூலைப்பற்றி எல்லாப் பார்ப்பன சோதரரும் கண்மூடி மௌனிகளாய் இருக்கும் காரணம் தான் புரியவில்லை. எந்தப் பார்ப்பன சகோதரரும் நூலில் குறிப்பிட்டுள்ள பகுதி புரியவில்லை என்று கூற இயலாது. சாதாரண அறிவுள்ள எவரும் அதனைப் படித்துப் பொருளுணரக் கூடும் என்பதை யான் அழுத்தமாகக் கூற முடியும். இந்நிலையில் இந்நூலைப் பற்றித் தகராறு கடந்த மூன்று வாரங்களாகத் தமிழ்ப் பத்திரிகைகளில் வெளிவந்து கொண்டிருக்கும்போது, கற்றறிந்த தேசியப் பார்ப்பனர் மௌனம் சாதிப்பது வியப்பைத் தருவதாகும். இவர்கள் ஒரு குற்றமுமில்லாத மறைமலையடிகளின் அறிவுரைக் கொத்தைப் பற்றிச் சில நாட்களுக்கு முன் தான் மிகப் பெருங்கிளர்ச்சியைச் செய்தவர்கள். ஆனல் இப்பொழுதோ, அவர்களில் ஒருவராவது அறிவும் நிலைமையும் உள்ள ஒருவராவது—தமிழால் வயிறு வளர்த்து வருபவரும், தமிழ்க் கூட்டையே—தம்மைக் காத்துவரும் தமிழ்க் கூட்டையே கலக்க முயலும் ஸ்ரீ. ஐயங்காரைத் தட்டிக் கேட்காமலிருப்பது விந்தையன்றோ.



### உத்யோகமாற்றம்

திரு. கே. பாலாஜீ ராவ் அவர்கள் சிவகங்கை சப்ஜட்ஜாக மாற்றப்பட்டிருக்கிறார்.

அடுத்த காங்கிரஸ் மகாசபை மகாராஷ்டிரத்தில் கூடக் கூடுமென்று தெரிகிறது.

## மின்பூ செட்டியார்கள் விஷயம்

### சட்டசபையில் கேள்வி

இந்திய சட்டசபையில் காங்கிரஸ் மெம்பராயிருக்கும் அனந்தசயனம் அய்யங்காரவர்கள் பர்மாவைச் சேர்ந்த மின்பூ ஜில்லாவில் செட்டியார்களைத் தங்கள் நிலங்களை விட்டு வெளியேற்ற வேண்டுமென்று பர்மா சர்க்கார் உத்தேசித்திருப்பதைப் பற்றி ஒரு அவசரப் பிரேரபணை கொண்டு வந்தார். இதை அவசரப் பிரேரபணையாக ஏற்றுக் கொள்ள முடியாதென்றும் ஆனால் காலக்கிரமத்தில் பதிலளிக்கப் படுமென்றும் கூறப்பட்டது. செட்டியார்களின் நிலங்களிலிருந்து அவர்களை வெளியேற்றுவது அவர்களது உரிமையைப் பறிப்பதாகுமென்றும் இதனால் அவர்களுக்கு 2 கோடி ரூபாய் நஷ்டமேற்படுமென்றும் ஆகவே இந்திய சர்க்கார் பர்மா சர்க்காருக்கு அவ்வித நடவடிக்கை எடுத்துக்கொள்ளக் கூடாதென்று எச்சரிக்கை செய்ய வேண்டுமென்றும் குறிப்பிட்டார்.

---

### கனம் பொப்பிலி நன்கொடை

சாந்தி நிகேதனம் விஸ்வ பாரதியின் நிதிக்கு சென்னை சர்க்கார் பிரதம மந்திரி கனம் பொப்லி ராஜா அவர்கள் 2000 ரூபாய் நன்கொடை யளித்திருக்கிறார்.

---

### உத்தியோக மேற்க முடிவு

காங்கிரஸ் சட்டசபை விவாகாரப் பஞ்சாயத்து சமீபத்தில் கூடி புதிய அரசியலில் உத்தியோக மேற்பதென்ற முடிவுக்கு வந்திருப்பதாகத் தெரிகிறது. இது சம்பந்தமாகத் திடமாக இன்னும் ஒரு தீர்மானமும் நிறைவேற்றப்படவில்லை. அடுத்த மாதத்தில் பண்டித ஜவஹரும் காந்திஜியும் டில்லிக்கு வர விருப்பதால் அவர்களுடன் கலந்து ஒரு முடிவுசெய்து கொள்ளலா மென்ற உத்தேசத்துடனிருக்கிறார்கள்.

---

### உத்தியோக எதிர்ப்பு தினம்

காங்கிரஸ் காரர்கள் மந்திரி பதவி ஏற்பதை எதிர்க்கும் கமிட்டித் தலைவரான சர்தார் சால்துல் சிங்கும் காரியதரிசிகளான ஜினப் பி அகமது கித்வாயும் மஸானியும் பின்கண்டவாறு அறிவிக்கின்றனர்:— மார்ச்சு 8-ந் தேதி ஞாயிற்றுக்கிழமையை காங்கிரஸ் காரர்கள் மந்திரிபதவியை ஏற்கக் கூடாதென்று கிளர்ச்சி செய்யும் தினமாகக் கொண்டாட வேண்டும். அன்று பொதுக்கூட்டங்களும் ஊர்வலங்களும் நடைபெற வேண்டும்.

---

### மந்திரிகள் மீது நம்பிக்கையில்லாப் பிரேரணை

பர்மா சட்டசபையில் மந்திரிகள் மீது நம்பிக்கையில்லை யென்பதைத் தெரிவிப்பதற்காக அவர்களது சம்பளத்தைக் குறைக்க வேண்டுமென்ற பிரேரணையை பர்மா சட்டசபையில் கொண்டு வரப்போவதாக ஈ. ஏ. பிள்ளை நோட்டீஸ் கொடுத்திருக்கிறார். இவர் தொழிலாளர் பிரதிநிதியாக சர்க்காரால் நியமிக்கப் பெற்றவர்.

---



## அமெரிக்காவில் பத்திரிகைத் தொழில்

### 36 மாடிகள் உடைய மாபெரும் அச்சாலை

[ஸ்ரீ. எம். எஸ். ரெய்ட் என்பவர் 'பம்பாய் ஸ்டாண்டர்டி'ல் எழுதியது.]

'இந்தியத் தாய்' என்ற புஸ்தகம் போல் இல்லை இந்த 'அமெரிக்கத்தாய்' என்ற புஸ்தகம். இந்தப் புஸ்தகத்தை எழுதியவர் அமெரிக்காவில் பிரமுக பிரசங்கிகளில் ஒருவரான டாக்டர் சுதீந்திர போஸ் என்பவர். அவர் அங்கேயே சென்ற 25 வருஷங்களாக வசித்து வருகிறார். அந்த நாட்டின் நிகழ்ச்சிகளை யெல்லாம் அப்போதைக்கப்போது நேரிலேயே கண்டறிந்திருக்கிறார். அவருடைய பிரசங்கங்கள் அமெரிக்காவில் எல்லோராலும் போற்றப்படுகின்றன. ஆகவே, அவர் எழுதியுள்ள இந்தப் புஸ்தகம் அமெரிக்கர்களின் வாழ்க்கையையும் அவர்கள் சம்பந்தமான பிரச்னைகளையும் பற்றிய உண்மைகளைத் தெரிவிக்கக் கூடிய புஸ்தகமாகத்தான் இருக்கக் கூடியது என்பதில் சந்தேகமில்லை. புஸ்தகத்தில் 36 அத்யாயங்கள் அடங்கி இருக்கின்றன. பாரபக்ஷமின்றி அவர் அமெரிக்காவைப்பற்றிக் கூறியுள்ள விஷயங்கள் அமெரிக்காவின் பெருமையைப்பற்றி எடுத்துச் சொல்லுகின்றன. முக்கியமாக அமெரிக்காவில் பத்திரிகைத் தொழிலின் முன்னேற்றத்தைப்பற்றிய அதிகாரங்கள் ரொம்பவும் உபயோகமாக இருக்கின்றன.

### பத்திரிகைகள்.

அமெரிக்காவிலேயே மிகவும் பெரி பத்திரிகாலயம் 'கிகாகோ டெயிலி டிரிப்யூன்' என்பதுதான். இதன் பிர்மாண்டமான கட்டிடம் 36 மாடிகள் அடங்கியதாய் வானளாவி நிற்கிறது. இது மிகவும் அழகான கட்டிடமாகக் கருதப்படுகிறது. ஏராளமான பொருட் செலவில் கட்டப்பட்டது இது. இதற்குப் போட்டியாக இருக்கும் பெரிய பத்திரிகை 'நியூயார்க் டைம்ஸ்' என்பதுதான். இதுவும் 19 மாடிகள் அடங்கிய பெரிய கட்டிடத்திலிருக்கிறது.

இந்தப் பத்திரிகை ஆபீசில் ஆசிரியர் இடத்திற்கு அருகே ஒரு செதுக்கு வேலை செய்யப்பட்டிருக்கிறது. அதில் தற்கால பத்திரிகைகளின் நோக்கத்தைப்பற்றி ஒரு விளக்கம் கூறப்பட்டிருக்கிறது.

"பத்திரிகை ஸ்தாபனம் என்பது அன்றையச் செய்திகளைப் பொதுஜனங்களுக்கு அறிவிக்கவும், வியாபாரம், கைத்தொழில் இவற்றை வளர்க்கவும், பொதுஜன அபிப்பிராயத்தை அறிவிக்கவும், வழிப்படுத்தவும், எந்த அரசியமைப்பின்படியும் கண்டிப்பதற்குத் தக்க வசதிசெய்ய முடியாத சர்க்காரைக் கண்டிப்பதற்கும் நவீன நாகரீகப்படி வளர்ந்திருக்கும் ஒரு ஸ்தாபனமாகும்" என்பதே.

'சிகாகோடெயிலி டிரிப்யூன்' பத்திரிகை ஒரு மணி நேரத்தில் 100,000 பிரதிகளை அச்சடிக்கிறது; பூரணமாக விஞ்ஞானத்தினால் ஏற்பட்ட அபிவிருத்தியால் உண்டான பயன் அது. வாரநாட்களில் 650,000 பிரதிகளும், ஞாயிற்றுக்கிழமை யன்று 100,0000 பிரதிகளும் அச்சடிக்கப்படுகின்றன. உலகம் முழுவதிலும் உள்ள 'டிரிபியூன்' பத்திரிகை நிருபர்களுக்கு உயர்ந்த சம்பளம் கொடுக்கப்படுகிறது என்று அதன் ஆசிரியர் சொல்கிறார். பத்திரிகை நல்ல லாபத்தில் நடந்து கொண்டிருக்கிறது.

### அமெரிக்க நீக்ரோவர்கள்

அமெரிக்காவிலுள்ள எந்த உத்தியோகத்திலும் நீக்ரோவர்கள் பங்கெடுத்துக் கொள்ளாமல் இல்லை; டாக்டர்கள், வக்கீல்கள், பல் வைத்தியர்கள், நர்ஸ்கள் தொகை அதிகரித்துக் கொண்டிருக்கிறது. பத்திரிகைத் தொழிலிலுங் கூட நீக்ரோ பத்திரிகைகள் 412 இருக்கின்றன. இது அமெரிக்க நீக்ரோவர்களின் அறிவு வளர்ச்சியைக் காண்பிக்கிறது.

### கொலைக் குற்றங்கள்

இது தற்காலீகமாக நடைபெறுகிறதில்லை. நிரந்தரமாகவே நாளுக்கு நாள் சென்ற 25 வருஷங்களாக அதிகரித்துக் கொண்டு வந்திருக்கிறது, கொலைக் குற்றம் இரட்டிப்பு அதிகம் ஆகி இருக்கிறது. வருஷத்திற்கு 11,000 கொலைகள் நடைபெறுகின்றன. போயர் யுத்தத்தில் கொல்லப்பட்ட போயர்களின் மொத்தத் தொகையை விட இது அதிகமாகிறது. சென்ற வருஷங்களில் 1,000க்கு 80 முதல் 100 வீதம் கொலை நடந்திருக்கிறது.

'ஒருவரும் எந்த இடத்திலும் நிர்ப்பயமாக இருக்க முடியாது' என்று டாக்டர் ஹாப்மன் என்பவரே சொல்லியிருக்கிறார். கொலைகள் மிகக் கொடூரமானதாயும், அதிகாரிகளின் சாமர்த்தியத்தையெல்லாம் மீறி சாதுர்யமாகவும் செய்யப் படுகின்றனவாம். அமெரிக்க நாகரீகத்தின் வளர்ச்சி இந்தமட்டில் இருக்கிறது.

### விபத்துக்கள்

ஒரு நாளைக்கு ஒரு மணிக்கு 2 பேர் வீதம் மோட்டார் இதர வண்டிகளினால் ஏற்படும் விபத்துக்களில் மரண மடைகின்றனர். அமெரிக்க மரண விகிதம் இதர எல்லா தேசங்களையும் விட மிக அதிகமானதாக இருக்கிறது. இது சம்பந்தமான புள்ளி விவரங்கள் இந்தப் புஸ்தகத்தில் ஏராளமாக அடங்கியிருக்கின்றன. ஆயினும் புஸ்தகத்தைப் படிப்பதற்குச் சுவாரஸ்யமானதாக ஆக்கி இருக்கிறார். ஆசிரியர் அமெரிக்க தேசிய வீரரான ஜார்ஜ் வாஷிங்டனின் வாழ்க்கைச் சித்திரம் அவருடைய குணாதிசயங்களைப் பற்றி, கேட்டிராத விஷயங்கள் எல்லாம் இதில் அடங்கியிருக்கிறது. அதே விதமாகத்தான் ஆப்ரஹாம்லிங்கனைப்பற்றியும் உள. ஆகவே அமெரிக்காவிற்குப் படிக்கப் போகும் ஒரு மாணவன் இந்தப் புஸ்தகத்தைப் படிப்பதால், பெரிதும் பயன் அடைவான்.

---

### பர்மாவின் புதிய கவர்னர்

பர்மாவின் புதிய கவர்னரான திரு கோக்ரேன் பிரபு ஏப்ரல் 17-ந் தேதி யன்று ரான்புரா என்ற கப்பலில் மார்சேல்ஸிலிருந்து இந்தியாவுக்குப் புறப்படுவார்.





## நோட்டீஸ்

சிவகெங்கை

டி. முன்சீபு கோர்ட்டு

1935ஞ ஸூட் நிர். 984.

முத்துக்கருப்பன் செட்டியார் — வாதி

முத்துத் தேவர் — பிரதிவாதி.

வாதிக்கு பிரதிவாதி 18—1—35உ யில் ரூ. 200-க்கு எழுதிக் கொடுத்திருக்கிற பிரும்சேரி நோட்டின் பேரில் ஷை அசல்வட்டி தொகையை வறப்பெற வியாஜியம் செய்து 9-3-36உ வாய்தா ஏற்பட்டிருக்கிறது.

அதற்கு ஏதும் ஆட்சேபனை இருந்தால் அன்று பகல் 10 மணிக்கு ஆஜராகி தெரியப்படுத்திக் கொள்ள வேண்டியது. இல்லாவிட்டால் ஒருதலை பக்ஷமாகத் தீர்மானிக்கப்படும்.

S. Krishnaswami,
வக்கீல்.

சிவகங்கை, 22—2—36.





## ரங்கூன்-சென்னை தபால் மாற்றம்

### போஸ்ட் மாஸ்டர் ஜெனரல் அறிக்கை

1936-ம் வருஷம் பிப்ரவரி மாதம் முதல் தேதியிலிருந்து சென்னை—ரங்கூன் நேர்முகமான தபால் சர்வீஸ் நிறுத்தப்பட்டிருக்கிறது. இந்தியாவிலிருந்து ரங்கூனுக்கும் ரங்கூனிலிருந்து இந்தியாயிக்கும் இனி தபால்கள் கல்கத்தா மார்க்கமாக அனுப்பப்பெறும்.

சென்னை—ரங்கூன்

| சென்னை தபால் எடுக்கும் நாள் | கல்கத்தா வந்து சேரும் நாள் | கல்கத்தாவைவிட்டு மெயில் ஸ்டீமர் புறப்படும் நாள் | ரங்கூனில் தபால்கள் சேரும்தினம் |
|---|---|---|---|
| திங்கள் இரவு மணி 8-30<br>செவ்வாய் ,,<br>புதன் ,, | புதன் காலை 7-54<br>வியாழன் ,,<br>வெள்ளி ,, | வெள்ளிக் கிழமை காலை 9 மணி | திங்கட்கிழமை |
| வியாழன் ,,<br>* வெள்ளி காலை 9 மணி | சனி காலை ,,<br>ஞாயிறு காலை 7-20 | ஞாயிற்றுக் கிழமை காலை 9 மணி | செவ்வாய்க்கிழமை |
| வெள்ளி மாலை மணி 8-30<br>சனி ,,<br>ஞாயிறு ,, | ஞாயிறு காலை 7- 4<br>திங்கள் ,,<br>செவ்வாய் ,, | செவ்வாய்க் கிழமை காலை 9 மணி | வெள்ளிக் கிழமை |

* கடிதங்கள் மட்டும்

ரங்கூன்—சென்னை

| ரங்கூனில் தபால் போடும் தினம் | ரங்கூனிலிருந்து கப்பலுக்கு அனுப்பும் தினம் | கல்கத்தா வந்து சேரும் நாள் | சென்னை தபால்கள் வந்து சேரும் தினம் |
|---|---|---|---|
| சனி மாலை<br>ஞாயிறு ,,<br>திங்கள் ,,<br>செவ்வாய் காலை | செவ்வாய் | வியாழன் | சனிக்கிழமை காலை 7-50 மணி |
| செவ்வாய் மாலை<br>புதன் ,,<br>* வியாழன் காலை | வியாழன் | ஞாயிறு | செவ்வாய் காலை 7-30 |
| வியாழன் மாலை<br>வெள்ளி ,,<br>சனி காலை | சனிக்கிழமை | செவ்வாய் | வியாழன் காலை 7-50 |

* ரிஜிஸ்தர் செய்யப்படாத கடிதங்கள் மட்டும்

## ஸ்பெயினில் புதிய சர்க்கார்

### மன்னர் கட்சி வெளியேற்றம்

மாட்ரிட், பிப், 21.

ஸ்பெயினில் சமீபத்தில் ஏற்பட்ட தேர்தல்களினால் பழைய மந்திரிசபை போய் புது மந்திரி சபை ஏற்பட்டுவிட்டது. தீவிர வாதக்கட்சித் தலைவர்களின் வேண்டுகோள் ஸ்பெயினில் அமைதியை நிலவச் செய்தது. மன்னர் கட்சித் தலைவர்கள் நாட்டைவிட்டு வெளியேறிவிட்டனர். குடியரசுக் கட்சியில் தீவிரவாதிகள் தலைவரான திரு. அஸானா பிரதம மந்திரி பதவியை ஏற்றுக்கொண்டார். நிதி இலாகாவுக்கும் போக்குவரத்து இலாகாவுக்கும் குடியரசு ஐக்ய கட்சியைச் சேர்ந்த இருவர் நியமிக்கப் பட்டுள்ளனர். மற்ற மந்திரிகள் அனைவரும் அஸானா கட்சியைச் சேர்ந்தவர்களே.

சட்டசபைக்கே அரசியல் கைதிகளுக்கு மன்னிப்புக் கொடுக்கும் அதிகாரம் இருப்பதால் தற்காலீக சுதந்திரம்தான் அவர்களுக்குக் கொடுக்கக்கூடுமென்று தெரிகிறது.

சட்டத்தையும் அமைதியையும் நிலைநாட்ட சர்க்காருடன் யாவரும் ஒத்துழைக்கும்படி பிரதம மந்திரி அஸானா தேசமக்களைக் கேட்டுக்கொண்டுள்ளார்.

## காந்திஜிக்கு ஸ்வீடன் குழந்தைகள் பரிசு

காந்திஜிக்கு ஸ்வீடன் தேசத்துப் பள்ளிக்கூட மொன்றிலிருந்து சில குழந்தைகள் கடிதமொன்றெழுதி அத்துடன் 35 ரூ-க்கு ஒரு செக்கையும் அனுப்பியிருப்பதான ஓர் அதிசயமான செய்தி வெளியாகி யிருக்கிறது. அத்துடன் காந்திஜி சர்க்காவோடு பீரங்கிகளுக்கு முன்னே நிற்பது போலவும் வேறு ரூபத்திலும் சில படங்கள் அக்குழந்தைகளால் அனுப்பப் பட்டிருக்கின்றன. அக் குழந்தைகளின் கடிதத்தில் குறித்திருப்பது வருமாறு:—

அன்புள்ள காந்தி,

எங்கள் பூகோள சாஸ்திரத்தில் இந்தியாவைப் பற்றி நாங்கள் படிப்பதுண்டு. உங்களைப் பற்றியும் அதில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்தியாவில் தொழிலாளர்களும் விவசாயிகளும் எவ்வளவு கஷ்ட வாழ்க்கையை நடத்துகிறார்களென்று நாங்கள் கேள்விப்பட்டுள்ளோம். மேலும் இந்தியா தனது சுதந்திரத்திற்காகவும் விடுதலைக்காகவும் நிராயுதபாணியாகச் செய்து வருகின்ற அகிம்சா யுத்தத்தையும் நாங்கள் படித்தறிந்திருக்கிறோம். அந்த யுத்தம் சீக்கிரம் தனது வெற்றிகரமான முடிவை அடைய வேண்டுமென்று நாங்கள் ஆசைப்படுகிறோம்.

பல வருஷங்களுக்கு முன்பு எங்கள் வகுப்பில் ஒரு சிறு பத்திரிகை பிரசுரிக்கிறோம். எங்கள் 4வது வகுப்பில் படிக்கிறோம். எங்கள் பள்ளிக்கூடக் கட்டிடத்தின் படமொன்றும் நாங்கள் அனுப்பியிருக்கிறோம். அது அழகாக இருக்கவில்லையா?

---

# :*: பொழுது போக்கு :*:

### ஷோக்துக்கார்டு!

"வயிறு கூழுக்கழுகிறபோது கொண்டை பூவுக்கழுகிறது" என்பார்கள். அதுபோல் இருக்கிறது தபால் இலாகாவின் சங்கதி. கார்டு இருக்கிறது பாருங்கள் முக்காலணக்கார்டு. அதற்கு என்னவோ சிங்காரஞ் செய்யப்போகிறார்களாம்! என்னென்னமோ படங்களெல்லாம் வரைந்து அந்த முக்காலணக் கார்டை அழகுபடுத்துவது அவர்களுடைய உத்தேசமாம். இதன் நோக்கமென்னவென்று நீங்கள் அறிய விரும்புகிறீர்கள் அல்லவா! அதைத்தான் சொல்லவிருக்கிறேன். தபால் கார்டுகளின் விற்பனை முந்தி—காலணா அரையணாவாக இருந்த காலத்தில்--எவ்வளவு விற்பனையாயிற்றோ அதில் பாதிகூட முக்காலணா ஆனவுடன் விற்பனையாகவில்லை! கார்டிலே படங்கள், வர்ணங்கள் இல்லாத குறையினால் தான் ஜனங்கள் வாங்காமலிருப்பதாகவும் அதிலே ஏதேனும் படங்கள் ஒட்டிவிட்டால் முன்போல வாங்கிவிடுவார்கள் என்றும் தபால் இலாகாதார் மூளையிலே தோன்றியிருக்கிறது! இந்திய ஜனங்களுடைய மனப்பான்மையை இந்த 180 வருஷங்களுக்குள் எவ்வளவு நன்றாக இவர்கள் உணர்ந்துகொண்டிருக்கிறார்கள் பாருங்கள். கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டதுபோல தபால் இலாகா செய்யப்போகும் புதிய "சித்ரவேலை" ஜனங்களுக்கு உள்ளசௌகர்யத்தையும் கெடுக்கப்போகிறதென்பது உறுதி! அட்ரஸ் எழுதும் பக்கத்திலேகூட இப்பொழுது நாலு வாக்கியங்கள் எழுத வசதியிருந்தது! அதிலும் மண்விழுந்தது புதிய ஏற்பாட்டினால்!

### காரைக்குடித் தீர்மானம்

காங்கிரசில் சேருவோர் பட்டங்களைத் துறக்கவேண்டுமென்று காரைக்குடி அரசியல் மகாநாட்டில் தீர்மானிக்கப்பட்டதல்லவா? பொதுவாக மகாநாட்டுத் தீர்மானங்கள் அநேகமாக மகாநாட்டுப் பந்தலோடு போய்விடுவது நமது நாட்டுவழக்கம். அந்தவழக்கம் காங்கிரஸ் காரரையும் விட்டுவிடவில்லை. பட்டத்துறப்புத் தீர்மானம் மகாநாடு முடிந்து ஒருமாத மாவதற்குள் அடிபட்டுப் போய்விட்டது. அது இனி உயிர்பிழைக்கு மென்று நினைக்கிறீர்கள்? காங்கிரஸ் காரர்கள் சில பட்டதாரிகளின் தயவிலே கண்ணோட்டஞ் செலுத்திவருகின்றனர். அந்த எண்ணத்தில் மண்விழக் கூடாதென்று அவர்கள் வெகு ஜாக்கிரதையாக இருந்து அந்தத் தீர்மானத்துக்கு சமாதி கட்டிவிட்டனர். வேலூர், திருவண்ணாமலை முதலிய ஊர்களின் காங்கிரஸ் கமிடடியார் பட்டங்கள் சம்பந்தமான காரைக்குடித் தீர்மானத்தை நிச்சயமாக அனுஷ்டிக்க முடியாதிருப்பதை உத்தேசித்து அதற்குக் கட்டுப்படாத சிலரையும் காங்கிரசில் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று மாகாண சிவிக்போர்டுக்கு சிபார்சு செய்ய முன்னரேயே இதற்கு குழிதோண்டக் காத்திருந்த தலைவர்கள் அனுமதி கொடுத்து விட்டனர்! மகாநாட்டுத் தீர்மானத்துக்கு முகத்தில் கரி!

### யம பார்வை

சட்டசபை அங்கத்தினர்கள் மீது யமதர்மராஜனுக்கு இவ்வளவு கூர்மையான பார்வை ஏன் ஏற்பட்டிருக்கிறது! அதிலும் காங்கிரஸ் அங்கத்தினர்களிடம் இவ்வளவு அதிகமான கவனம் ஏனோ? இதுவரை அசெம்பிளி காங்கிரஸ் மெம்பர்கள் ஐவர் அந்த இயமபகவான் பார்வையில் கலந்துவிட்டனர். ஆறுவதாக அஸ்லாம் மெம்பரான பர்டலாய் சமீபத்தில் காலமானர். இந்த நிலைமை நீடித்துவிட்டால் என்ன செய்வதென்று பலருக்குப் பலமான கவலையிருக்கிறது. காக்கிரஸ் கட்சியினர் பதவிகள் ஏற்கவிருக்கும் இச்சமயத்தில் இயமதர்மன் தமது தொழிலை இவ்வளவுதீவிரமாக நடத்துவதன் மர்மமென்ன? சர்க்காருக்கும், இயமதர்மனுக்கும் இதுசம்பந்தமாக ஏதேனும் இரகசிய ஒப்பந்தங்களிருக்கின்றனவாவென்று சத்தியமூர்த்தியார் ஏன் ஒரு அவசரக்கேள்வி கேட்கக்கூடாது?

### சாமி நடுநிலைமை

இந்திய சட்டசபையில் சம்பள பட்டுவாடா விஷயமாக அதாவது தொழிலாளர் வேலை நிறுத்தத் தடை மசோதாவை ஸ்ரீ மோடி கொண்டுவந்தபொழுது காங்கிரஸ் மெம்பரான சாமி வெங்கடாசலஞ் செட்டியார் நடுநிலைமை வகித்தாராம்! இதைக் கண்டித்துக் கோவைக் காங்கிரஸ் பொதுக் கூட்டமொன்றில் பலமாகப் பேசப்பட்டது. அவர் ஏன் நடுநிலைமை வகிக்கவேண்டும். காங்கிரஸ்காரர்கள் பெரும்பாலோர் அதற்கு விரோதமாக ஓட் கொடுத்திருக்கிறார்களே. இவரும் அப்படிச் செய்யக் கடமைப்பட்டவர்தானே. ஏன் இவர் மௌனஞ் சாதித்தார் என்றெல்லாம் பல சந்தேகங்கள் காங்கிரஸ் வாக்காளர்களுக்கு எழக்கூடுமல்லவா? திரு. சாமியவர்கள் இதற்கு என்ன பதில் சொல்லப் போகிறாரென்று நமக்குத் தெரியாது! தொழிலாளருக்கு காங்கிரஸ் நன்மை செய்யவேண்டுமென்ற கொள்கையுள்ளதா அல்லவா என்ற விஷயத்தில் இவருக்கு திடீரென்று சந்தேகம் ஏற்பட்டிருக்க வேண்டுமென்று எனக்குத் தோன்றுகிறது. காங்கிரஸ் திட்டம் இன்னும் நன்றாகப் பாடமாகாமலிருக்கலாம்!







Best copy available.



# முசோலினி ஒரு சைவர்
## கமால் பாட்சாவின் விவாக ரத்து
### ஸ்டாலின் சம்பளம் நூறு ரூபாய்

[ஐரோப்பாவின் பிரபல மனிதர்களைப் பற்றி ஜான்குந்தர் என்பவர் "ஐரோப்பாவிற்குள்" என்றொரு நூல் எழுதியிருக்கின்றார். அதில் பல விஷயங்கள் பொது ஜனங்கள் அறியவேண்டியவைகளாக இருக்கின்றன. அவற்றுட் சில வருமாறு.]

ஸ்டாலின், ருஷியா முழுவதையும் ஆண்டு வரும் ஒரு சர்வாதிகாரி. "எஃகால் செய்யப்பட்ட மனிதர்" என்று அவரைப் பிறர் கூறுவது வழக்கம். பல லக்ஷக் கணக்கான ஜனங்களின் விதியை நடத்தும் அளவற்ற அதிகாரம் உடையவராக அவர் இருந்து கொண்டிருக்கிறார். இவ்வளவு அதிகாரமும் பல மக்களை ஆளுந் திறமையும் உள்ள சர்வாதிகாரி ஸ்டாலினுக்குச் சம்பளம் என்ன தெரியுமா? மாதம் 100 ரூபாய் தான்! அந்தப் பணத்தைக் கொண்டு தான் அவர் வாழ்க்கையை நடத்த வேண்டியிருக்கிறது. முஸோலினியை இவருடன் ஒத்திட்டுப் பார்க்கையில் முஸோலினியை விட, ஸ்டாலின் எவ்வளவோ மேம்பட்டவர். ஸ்டாலின் நற்குணங்கள் மிக்கவர். பெருந் தன்மையும், உயர்ந்த மனப்போக்கும் உடையவர். தமாஷாகப் பேசும் சுபாவம் உடையவர். கிரெம்லினில் இவர் மூன்றே அறைகளில் வசித்து வருகிறார். சில சமயங்களில் ஸினிமாக்களுக்குப் போவார். சில சமயங்களில் பாட்டுக்கச்சேரிக்கு விஜயம் செய்வார். அவருடையநேரத்தில் அதிகமான அளவு தேச முன்னேற்றக் காரியங்களில்தான் செலவிடப்படுகிறது. நிறையப்படிப்பதில் அவருக்குப் பிரியமதிகம். அடிக்கடி புகைக்குழாயில் புகையிலை வைத்துப் புகைபிடித்துக்கொண்டிருப்பார். நல்ல உணவையும், பழைய பிராந்தியையும் சாப்பிடுவதில் அவருக்குப் பிரியம் உண்டு. அவருக்கு மாதச் சம்பளம் 6 பவுன் 15 ஷில்லிங்குகளாம். அவருக்குவேலைக்காரர்கள் மோட்டார்கள், புத்தகங்கள் முதலியவைகளை ஸர்க்காரே கொடுக்கிறது. அவர் இருமுறைக் கல்யாணம் செய்துகொண்டார். குழந்தைகளிடத்தில் அவருக்கு அத்தியந்த பிரியம். அவர் எப்பொழுதும் ஆடம்பரமற்ற சாதாரண உடைகள்தாம் அணிவார்.

### ஸீனர் முசோலினி

ஸீனர் முஸோலினி, உறுதியில் ஸ்டாலினுக்கு அடுத்தபடியாகக் கூறலாம். இவர் சிகரெட் சுருட்டு முதலியவை பிடிப்பதில்லை, மது வருந்த மாட்டார்; அதிக நெருக்கமான நண்பர்களே கிடையா; சைவ உணவுக்காரர்; சங்கீதப் பிரியர். முதுமை, மெலிந்த ஸ்திரீகள், பூனைகள், பணம் தனவந்தர்கள் ஆகிய விஷயங்களில் முஸோலினிக்கு வெறுப்பு அதிகம். அவருக்கு ரோமாபுரி, விவசாயிகள், புத்தகங்கள், அவர் மகள் எட்டா, ஆகாய விமானங்கள், வேகமாய்ப் பிரயாணம் செய்தல் ஆகிய விஷயங்களில் பிரியம் அதிகம். அவர் தினசரி இறைவனை வணங்குகிறார். அதிகமாகச் சிரிப்பதில்லை. வெனிஜோ அரண்மனையில் வேலை செய்கிறார். டார்லோனியா வில்லாவில் அவர் தினசரி 10 நிமிஷம் ஒய்வெடுத்துக்கொள்கிறார். அவரைத் தொந்தரை கொடுக்கும் தைரியத்துடன் உயிரோடிருக்கும் பேர்வழி அவருடைய ஒரே மகளான எட்டா தான். அவருந்த மாதச் சம்பளம் 150 பவுன். காலையில் அவர் பழம் உட்கொள்ளுகிறார்.

### ஹேர் ஹிட்லர்

இவர் ஒரு விசித்திரப் பேர்வழி. ஸ்திரீகள் என்றால் இவருக்குப் பெரும் வெறுப்பு. புத்தகங்கள், நல்ல உடைகள், வியாபாரம், நல்லுணவு, செல்வம் ஆகிய எதுவும் இவரை உற்சாகப் படுத்த முடிவதில்லை. இவர் 1934 ஜூன் மாதத்தில் ஸீனர் முஸோலினியைக் கண்டு பேசச் சென்றபோது ஒரு 'ரெய்ன் கோட்' வாங்கினர். அது தவிர இன்னம் இவர் ஒரு துணியும் வாங்கியது கிடையாது. இவருக்கு உடற்கட்டும் திருப்திகரமாயில்லை. நடந்த ஆண்டுதான் இவர் நிறையில் 12 பவுண்டு அதிகமானர்.

### கமால் பாஷா.

துருக்கிச் சர்வாதிகாரி கமால்பாஷா ஐரோப்பாவில் ஓர் அரிய தலைவராய் இருந்து வருகிறார். அவர் ஒரு தனித்த மனிதராய்ச் சங்கயாவிலுள்ள ஓர் இல்லத்தில் வாழுகின்றார். (அவர் தம் மனைவியை விவாகரத்து செய்து விட்டார்.) அவரை யாரும் சுலபமாகப் பார்த்துவிட முடியாது. துருக்கிப் பத்திரிகைகள் அவரைப்பற்றி ஒன்றும் எழுதுவதில்லை. அவருக்குச் சீர்திருத்தத்தில் விருப்பமதிகம். அவர் சர்வாதிகாரியாய் வந்தபின் பல மனைவிகளை மணந்துகொள்வது, மந்திர தந்திரங்கள், ஸ்திரீகளை வீட்டுக்குள் அடைத்து வைத்தல் ஆகியவைகளை ஒழித்துவிட்டார். அவர் தம் பெயரை ஏழுமுறை மாற்றிக்கொண்டார். ஸ்கூலில் அவர் பெயர் முஸ்தபா கமால்.

### ஜெனரல் கோயரிங்

இவர் அதிகாரம் செலுத்துவதில் விருப்பமுடையவர்; பெருந்தன்மை வாய்ந்தவர். அழகிய உடைகளணிவதில் யூனிபார்ங்களணிவதில் இவருக்கு விருப்பமதிகம். நீண்ட வாளொன்றை வைத்துக்கொண்டு இருக்கிறார். கடந்த ஆண்டு இவர் பிராஎம்மீ கோனர்மான் என்ற பிரபல நடிகையை மணந்துகொண்டார். அதுபோது பொதுஜனங்களால் இவருக்கு 80 ஆயிரம் பவுன்கள் மதிப்புள்ள பரிசுகள் அளிக்கப்பட்டன. எவ்வளவு வீரமுள்ளவராயிருந்த போதிலும், இவருக்கு ஹிட்லரிடம் பயம் அதிகம். இவர் காரியமில்லாமல் ஹிட்லரைப் பார்க்கமுடிவதில்லை. முன்னறிவிப்பில்லாமல் ஹிட்லரைப் பார்ப்பவர்கள் உலகில் இருவர்தாம். ஒருவர் ஹிட்லருக்கு அன்னியநாட்டு வியவகாரங்களில் ஆலோசனை கூறுபவரான ரிப்பன்டிராப். மற்றவர் பொருளாதரா விஷயங்களை நிர்வகித்துவரும் ஷாக்ட் என்பவர்.

## அமராவதிபுதூர்

### உலகநாயகியம்மன் திருவிழா

இவ்வூரில் சிவராத்திரிக்கு அடுத்தநாள், அமராவதிக் கோட்டையிலுள்ள, இக்கோவிலில் ஒரு திருவிழா நடக்கும். அதில், ஊரில் அவ்வருடத்தில் பிறந்த குழந்தைகளுக்கு மொட்டையடித்து கரும்புத்தொட்டி கட்டி மூன்றுதரம் சுவாமி கோவிலைச் சுற்றி வருவது வழக்கம். இதைப்பார்க்கவும், கடைகளில் தின்பண்டங்கள் வாங்கித்தின்னவும் ஜனங்கள் மத்தியானம் 2 மணியிலிருந்து கூடி, சாயந்திரம் ஆறு மணி வரை இருந்து பின் போய்விடுவார்கள். சிவகங்கை ஜமீன் பேஷ்கார் வந்து, முடிக்காணிக்கை வசூல்செய்து கொண்டு போவது வழக்கம். இதைத்தவிர இவ்வருடத்தில் கல்யாணமானவர்களும் காவடி எடுத்துவருவது வழக்கம். அது அநாகரீகம் என்று இரண்டுவருடமாகக் கைவிடப்பட்டது. ஹரிஜனங்கள் இளநீர்க்காவடி மாத்திரம்தான் எடுக்கலாம். கோவிலின் வெளியில் சன்று, கூத்தாடி விட்டுப் போகலாம் இவ் வருடம் ஹரிஜனங்களுக்கென்று இருக்கும் கோவில் முன்னுல், 'தீண்டாமைஒழிக' 'அன்பர்கள் வருக' என்று ஒரு வர்ணக் காகிதத்தில் எழுதித் தொங்கவிடப்பட்டிருந்தது. இதை ஹரிஜனங்களின் சுதந்தரத்தை நசுக்க விரும்பும் ஒரு அம்பலகாரர் பார்த்து, எழுதினவனை அடிப்பதாய்ப் பயமுறுத்தியதாகத் தெரிகிறது. இதில் என்ன தப்பிதமிருக்கிறது என்று வாசகர்களே சிந்தித்துப்பாருங்கள். இப்படி ஹரிஜனங்கள் ஓட்டு வீட்டைக்கட்டக்கூடாது, கட்டிலில் உட்காரக்கூடாது, படிக்கக்கூடாது, காபி குடிக்கக்கூடாது, உப்புமா, இட்லி தின்னக்கூடாது என்று சொல்லும் அம்பலகாரர் அவர்களை என்னவென்றழைப்பது? இதை நீக்கவேண்டியது அருளாளர் கடமை என்று "ஏழை ஊழியன்" எழுதுகிறார்.

### பட்டமங்கலம்

### ஸ்ரீஷண்முகானந்த வாசகசாலைக்கு நன்கொடை

இவண் திரு. பழ. பழ. பழனியப்ப செட்டியார் அவர்களுக்கு நாளது தைமீ 15வ நடைபெற்ற சாந்திக் கல்யாணத்தில் நன்கொடையாக ரூபாய் ஐந்தும், 20வ நடைபெற்ற திரு. அ. வீர. அ. சி. அ. மு. முருகேசன் செட்டியார் கல்யாணத்தில் நன்கொடையாக ரூபாய் ஐந்தும் 21வ. நடைபெற்ற திரு. மெ, மு. வீர. கா. மாணிக்கம் செட்டியார் கல்யாணத்தில் நன்கொடையாக ரூபாய் ஐந்து மனமுவந்து நமது வாசகசாலைக்கு அளித்துள்ளார்கள். மேற்படியார்களுக்கு நீண்ட ஆயுளும் சகல ஐஸ்வரியங்களும் அளிக்குமாறு எல்லாம் வல்ல இறைவனை பிரார்த்திப்பதாகவும் வாசகசாலையின் நன்றி அவர்களுக்கு உரித்தாகுக என்றும் யதரிசி அறிவிக்கிறார்.

## நோட்டீஸ்

தேவகோட்டை

டி. மு. கோர்ட்டு

1935ஞ O. S. நிர். 160.

சி. மு. சுப. மு. முத்துச்சாமி செட்டியார் } வாதி

பள்ளத்தூர் லேட் சோலயப்ப செட்டியார் குமாரர் ராம. சொ. ராமஞ் செட்டியார் } 6-ம் பிரதிவாதி

ஷை 6-ம் பிரதிவாதிக்கு:—

புரோநோட்டின் பேரில் ரூபாய் 2391-10-3 க்குதாவா. 28-2-36 ந் தேதிக்கு வாய்தா. ஆக்ஷேபணை இருந்தால் அன்று பகல் 10 மணிக்கு ஆஜராகித் தெரிவித்துக் கொள்ளலாம்.

T. G. ராமஸ்வாமி அய்யங்கார்,
வக்கீல்,
தேவகோட்டை,
20—2—36.







## சிறுகூடற்பட்டி நகரத்தா ரவர்களே!

நம் தனவைசியச் செல்வச் சிகாமணிகளும் வீரஞ்செறிந்த இளைஞர்களும் வதிந்துவரும் இவ்வூர் ஜனசமூகத்திற்கு ஒரு வேண்டுகோள்விடுக்க விரும்புகிறேன். முதலாவதாக ஊர் என்பதற்குப் பிரதானமாக அவசியமான விளக்குகள் போடப்படவில்லை. ஊருக்குள் சுகாதாரத்திற்குப் பாதகமாக தெருவெல்லாம் நடுவாகச் சாக்கடைத்தண்ணீர் ஓடி ஜனங்கட்குக் கேட்டை உண்டாக்கிக்கொண்டிருக்கின்றது. ரோட்டு வசதிகளைப்பற்றிச் செல்லவேண்டியதில்லை. மாலை (8) மணிக்கு மேல் ஜனங்கள் தெருக்களில் வர பெரிதும் அசௌகர்யமாக இருக்கிறது. பத்தொன்பது ஆண்டுகட்கு முன் காலஞ்சென்ற அன்பர் திரு. கரு. சி. பழ. பழநியப்ப செட்டியாரவர்கள் பொருள் உதவிகொண்டு முன்பு இராமநாதபுரம் டிஸ்ட்ரிக்ட் போர்ட், திருப்பத்தூர் தாலூகா போர்ட், மெம்பருக விருந்த கீழச்சிவற்பட்டி உயர்திரு, யெ. நா. காசிவிஸ்வநாதன் செட்டியாரவர்கள் பெரு முயற்சி செய்து ரோடுகள் போட்டு கீழச்சிவற்பட்டி, திருப்பத்தூர் போகும் ரஸ்தாவில் இணைத்து வசதியளித்தார்கள்.

நகரத்தாரவர்களே, அன்பர்களே, இளைஞர்களே, நாகரீகம் சுடர்விட்டுத் திகழும் இக்காலத்தில் தாங்கள் ஒவ்வொருவரும் நகருக்கு நன்மை புரியும் முயற்சியற்று தூங்கிக் கொண்டிருந்தால் நகரம் செழிப்புடன் ஓங்குவதெங்ஙனம்?

இவ்வூர் கிராம முன்சீப் நண்டர் ராசு நாயக்கரவர்களாவது நகரச் சீர்திருத்தத்திற்கு ஆகவேண்டிய நடவடிக்கையை உத்தியோக முறையில் டிஸ்ட்டிரிக்ட் போர்ட்டாரவர்கட்குத் தெரியச்செய்ய வேண்டுகிறேன். இல்லாதபட்சத்தில் (சென்னிலக்குடி என்ற சிறுகூடல்பட்டிக்கு) தொழில்வரி மற்ற வரிகள் விதித்துவரும் ராமநாதபுரம் ஜில்லா போர்டாரவர்களே இதை நேரில் கவனித்து ரோட்டு குடிதண்ணீர் விளக்கு, கல்வி, சாக்கடை முதலிய சுகாதார வசதிகளைச் மிகவிரைவில் செய்யவேண்டியது அவசியத்திலும் அவசியம் என்பதை ஞாபகப்படுத்துகின்றேன் என்று நகர்நலத் தொண்டன் எழுதுகிறார்.



## பகத்சிங் படங்கள் பறிமுதல்

(நமது நிருபர்)

காரைக்குடி, பிப், 21வ.

20—2—36வ மாலை 6-மணிக்கு காரைக்குடி போலீஸ் ஸர்க்கிள் இன்ஸ்பெக்டரும் சப் இன்ஸ்பெக்டரும், சுமார் 10 கான்ஸ்டபிள்களுடன் காரைக்குடி ஆனந்தபவான் காபி ஹோட்டல், மோத்திலால் எம்போரியம், பாரதி பிக்சர் பாலஸ், தங்கசாமி பார்பர் ஷாப் முதலிய பல கடைகளைத் திடீரென சோதனை செய்ததின் காரணமாக ஆனந்தபவான் காபி ஹோட்டலிலிருந்து லாகூர் சதிவழக்குக் கைதிகள் பகத்சிங், ராஜகுரு, சுக்தேவ், தத்தர் ஆகியவர்களுடையவும் அவர்கள் சம்பந்தப்பட்ட மற்றும் ஆறு படங்களையும், தங்கசாமி பார்பர் ஷாப்பிலிருந்து இரண்டு படங்களையும் பறிமுதல் செய்து ஷை கடைகளின் சொந்தக்காரர்களின் பெயர்களையும் குறித்துப் போயினர். இதுவிஷயமாகப் போலீசார் விசாரணை செய்து வருகின்றனர்.

## தேவகோட்டை நேஷனல் கிளப் பந்தடிமால்

(ஒரு நிருபர்)

இங்கு இருவர்களாகச் சேர்ந்து பந்தாடிப் பரிசுபெறும் விளையாட்டின் முடிவான விளையாட்டு வித்துவான் அரு. சோமசுந்தரம் செட்டியாரவர்கள் தலைமையில் 16-2-36ல் நடந்தது. அதில் காரைக்குடி அருணசலம் அண்ட் பார்ட்னர் டீமை சேர்ந்த அருணசலம் அண்ட் ஜெயபால் சிங் வின்னர்களாகவும், தேவகோட்டை இண்டியன் கிளப்பைச்சேர்ந்த எம். நடராஜன் அண்ட் சிங்காரம் ரன்னர்களாகவும் வெற்றிபெற்றனர். தலைவரவர்களால் வின்னர்களுக்கு பெரிய வெள்ளிக்கப்பும் ரன்னர்களுக்கு சிறிய வெள்ளிக்கப்பும் பரிசாக வழங்கப்பெற்றது. காரியதரிசி ப. வ. லெட்சுமணன் செட்டியாரவர்கள் நன்றி கூறினர்கள்.

## கொ. லட்சுமிபுரம்

(ஒரு நிருபர்)

இந்நகர் உயர்திருவாளர் ந. சொ. அரு. அருணசலம் செட்டியார் அவர்கள் ஸ்தாபித்திருக்கும் சொக்கலிங்க வித்தியாசாலையில் நாளது யுவ ஆண்டு மாசித் திங்கள் 8-ம் நாள் பிற்பகல் 4 மணிக்கு மாணவ மாணவிகளால் "ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் விழா" இனிது கொண்டாடப்பெற்றது. மாணவ மாணவிகள் கடவுள் வாழ்த்துப் பாட விழா இனிது ஆரம்பமாயிற்று. அது காலை சொ. வி. மாணவ மாணவிகள் ஆ. சுப்பையா, சா. பொன்னையா, அண. முத்து, எஸ். ராமகிருஷ்ணன், வயி. லெட்சுமணன், சு. ப. ஷண்முகம், லோ. ஷண்முகம், ம. குஞ்சரம், கா. ராமன், பெ. ஷண்முகம், ரெ. சரஸ்வதி முதலியோர் ஸ்ரீ ராமகிருஷ்ணரைப்பற்றிப் பிரசங்கம் செய்தனர்.

பின்னர் தலைமை ஆசிரியர் திரு. சி. வேலாயுதம் அவர்கள் ஸ்ரீ ராமகிருஷ்ணபரமஹம்சரின் மதக்கொள்கை என்ன? அவர் கண்ட உண்மையாது? என்னும் பொருள் பற்றி ஒரு சொற்பொழிவாற்றினர்கள்.

பின்னர் நாட்டுவாழ்த்துப் பாடப் பெற்று சபையோர்க்கு கற்கண்டு வழங்கியதும் விழா இனிது நிறைவெய்தியது.



# மின்பியூ நகரத்தார்களின் குறைகள்

### இந்திய சர்க்காருக்கு மகஜர்

### செட்டிநாடு குமாரராஜா டில்லி விஜயம்

புதியடில்லி பிப் 18வ.

செட்டிநாடு குமாரராஜா இங்கு இந்தியா கவர்ன்மெண்ட் கல்வி இலாகாக் காரியதரிசியான ஸர் கிரிஜா சங்கர வாஜபேயரைச் சந்திப்பதற்காக வந்திருக்கின்றார். அவர் ஸர் வாஜபேயரிடம் பிவின்பியூ செட்டிநாடு பாங்கி (லிமிடெட்) யால் சபையுடன் கூடிய கவர்னர் ஜெனராலுக்குச் சமர்ப்பிப்பதற்காகக் கொடுக்கப்பட்ட விஞ்ஞாபனத்தைச் சேர்த்தார். சாகுவைச் சேர்ந்த ஸ்ரீமான் எம். ஏ. எஸ் ஏ. குட்டையன் செட்டியாரும் சாகு ஆர். எம். ஏ. எல். ஆர். எம். செட்டியார் கடையினரும் அந்த விஞ்ஞாபனத்தில் குறிப்பிட்டிருப்பதாவது:—நாங்கள் 1895-ம் வருஷம் முதல் மேல பர்மாவிலுள்ள மின்பியூ ஜில்லாவில் கடன் லேவாதேவித் தொழிலைநடத்தி வருகின்றோம். 1925ம் வருஷத்தில் எங்களுக்கு அந்த ஜில்லாவில் வசூலாகவேண்டிய கடன் பாக்கி 25 லக்ஷ ரூபாயாக இருந்தது. உலகச் சுணக்க மேற்பட்டதால் எங்களுக்குக் கடன் வாங்கியவர்கள் தங்கள் கடனுக்காகக் கொடுக்க இயன்ற ஜாமீன்களை நாங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தமேற்பட்டது. இதனல் எங்களிடம் மின்பியூஜில்லாவில்நிலங்கள் அடமானமாக வைக்கப்பட்டன. சுணக்கம் நீடித்ததால் நாங்கள் எங்களுக்குச் சேரவேண்டிய கடன் பாக்கிக்காக நிலச்சொந்தக்காரர்கள் தங்களது நிலத்தையே சாஸனஞ் செய்வதாகப் பத்திரமெழுதிக்கொடுக்க விரும்பினர். இதனல்அந்த சாசன பத்திரங்கள் ஏற்கவேண்டிய நிர்ப்பந்தம் எங்களுக்கு ஏற்பட்டது. பெரிதும் பிவின்பிவியூடவுன்ஷிப்பில் இருப்பதாயும், மான் வட கால்வாய் ஆயக்கட்டைச்சேர்ந்ததாயுமுள்ள 400 ஏக்கர் சர்க்கார் நிலங்களை இம்மாதிரி சாசனப்படுத்திக்கொடுத்ததை ஏற்றுக் கொண்டோம். சாசனம் செய்துகொடுத்த சமயத்தில் இந் நிலங்களில் சிலசர்க்கார் நிலங்களென்றும் கவர்ன்மெண்டின் அனுமதியில்லாமல் இவற்றை பர்மியரல்லாதவரும் விவசாயிகளல்லாதவர்களும் வைத்துக்கொள்ள முடியாதென்பது எங்களுக்குத் தெரியாது. அந்நிலங்களை நாங்கள் சில காலமாக வைத்துக்கொண்டிருந்தோம். ஆனல் 1933—34-ம் வருஷத்தில் இந்நிலங்களிலிருந்து எங்களை ஏன் வெளியேற்றக் கூடாதென்பதற்கு காரணங் காட்டும்படி ரெவினியூ அதிகாரிகள் கேட்டனர். முன்னர் இம்மாதிரியான ரெவின்யூ நடவடிக்கையை இதற்கு முன்பு பர்மா கவர்ன்மெண்டார் ஒரு போதும் அமுலுக்குக்கொண்டுவந்ததே இல்லை. அதிலும் முக்கியமாக மின்பு ஜில்லாவில் இம்மாதிரியான ரெவினியூ நடவடிக்கையே எடுத்துக் கொண்டதில்லை. இந்த ரெவினியூ நடவடிக்கைகளின் பயனாக டிப்டி கமிஷனர் 30—6—35 வரை நிலத்தை உண்மையான விவசாயிகளுக்கு விற்றுவிட அவகாசமளித்தார். மேற்கொண்டு அப்பீல் செய்ததில் 30-7-37 வரை எங்களுக்கு அவகாசம் அளிக்கப்பட்டது. ஆனல் பர்மா கவர்ன்மெண்டார் கடைசி உத்தரவில் தலையிடவும் சுணக்கத்தையும் வாங்குவார் அற்றிருப்பதையும் உத்தேசித்து நாங்கள் கோரியபடி 10 வருஷ அவகாசமளிக்கவும் மறுத்துவிட்டனர். நாங்கள் கடன் வாங்கியவர்களை எவ்விதத்திலும் நிர்ப்பந்திக்கவில்லை. எங்கள் வசமிருந்ததனல் நாங்கள் நிலத்தை துஷ்பிரயோசனப் படுத்தவில்லை. இதற்குப் பதிலாக சுணக்ககாலமெல்லாம் நிலத்தை சாகுபடி செய்து வந்திருக்கின்றோம். சர்க்கார் நிலவரி வசூலித்து வந்திருக்கின்றார்கள். இதனல் எங்களுக்கு அளித்திருக்கும் அவகாசத்தை 10 வருஷமாக நீடிக்க வேண்டுமெனக் கேட்டுக் கொள்ளுகின்றோம். இந்த 10 வருஷ காலத்தில் இந்த நிலங்களை சுதேச குடியானவர்களுக்கு அருகிலுள்ள நிலங்களுக்கு வாங்கப்படுவது போன்ற வாரத்திற்குக் குத்தகைக்கு விடுவதாக ஒப்புக் கொள்ளுகின்றோம்.



## கோர்ட்டில் ஆஜராகாத குற்றம்.

### ரு 250 ஜாமீன் பறிமுதல்

(நமது நிருபர்)

தேவகோட்டை பிப்ரவரி 21.

பள்ளத்தூர் போலீசார் ஷை ஷரகத்தைச் சேர்ந்த கல்லாங்குடி சேதுவைராவி என்பவன் அங்குள்ள சிவகங்கை தேவஸ்தான அய்யரொருவரை கட்டிவைத்து அடித்துத் துன்புறுத்தியதாக தேவகோட்டை ஜாயிண்டு மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் வழக்குத் தொடர்ந்திருந்ததில், எதிரி சேதுவைராவி சொந்த ஜாமீன் ரூ 2000மும், ரூ 250ல் இரண்டு நபர் ஜாமீனும் கட்டப்பட்ட பின்னர், ஜாமீனில் விடுதலை செய்யப்பட்டிருந்தான்.

எதிரி அநேகம் தடவைகளில் கோர்ட்டில் ஆஜராகாததோடு 7-2-36வ காலை 10 மணிக்கு கோர்ட்டில் ஆஜராக உத்திரவு ஏற்பட்டிருந்தும், அன்று தினமும் காலையில் ஆஜராகாமல் மாலை 5 மணிக்கு ஆஜரானன். கனம் ஜாயிண்டு மாஜிஸ்ட்ரேட் அவர்கள், எதிரியின் ஜாமீன்தார்களை அவர்களுடைய ஜாமீன்தொகையை ஏன் பறிமுதல் செய்யக்கூடாதென்பதற்கு காரணம் கூறும்படி விசாரிக்க, ஜாமீன்தார்கள் தாங்கள் ஏறிவந்த கார் வழியில் ஆபத்துக்குள்ளாகி விட்டதால் தாங்கள் குறிப்பிடப்பட்ட நேரத்தில் வரக்கூடவில்லையென்றும் இந்தத்தவறினல் தங்கள் ஜாமீன் பறிமுதல் செய்யப்படுமென்பது தங்களுக்குத் தெரியாதென்றும் கூறினர்கள்,

ஜாயிண்டு மாஜிஸ்ட்ரேட் அவர்கள், 19-2-36வ யன்று எதிரி வேண்டுமென்று காலங்கடத்துவதற்காகவே 7-2-36வ கோர்ட்டில் ஆஜராகவில்லையெனத் தீர்மானித்து, எதிரிக்கு ஜாமீன் கொடுத்த இரு நபர்களையும் தலைக்கு ரூ 250/—வீதம் கட்டும்படிக்கும், எதிரியின் சொந்த ஜாமீன் தொகையில் ரூ 250/—உடனே வசூலிக்கும்படிக்கும், பாக்கித்தொகையை எதிரி வழக்கு முடிவாகும் வரை ஒழுங்காக ஆஜரானல் திருப்பிக் கொடுத்து விடுவதென்றும் உத்திரவு கூறினர்கள்.

## கணக்குப்பிள்ளைக்கு 1 வருட தண்டனை

(நமது நிருபர்)

தேவகோட்டை பிப்ரவரி 21

சென்ற 7 மாதங்களுக்கு முன்பு காரைக்குடி முத்துப்பட்டணத்திலுள்ள பெரி. கா. சு. கிருஷ்ணன் செட்டியார் வீட்டிலிருந்த கருப்பையா பிள்ளை என்பவர் தன் எஜமானரிடமிருந்து ரூபா 1000-க்கு செக்கும் ரூபா 500 க்கு 100 ரூபா கரன்ஸி நோட்டுகளும் வாங்கிக்கொண்டு சில்லரை மாற்றி வருவதாகச் சொல்லி ரூபா 1500 உடன் ஓடிப்போய்க் கடைசியாக மணப்பாறைக்குச் சமீபத்தில் காரைக்குடி போலீசாரால் கைதுசெய்யப்பட்ட விஷயம் ஏற்கனவே நம் குமரனில் வெளியாகியுள்ளது.

தேவகோட்டை ஜாயிண்டு மாஜிஸ்திரேட் கோர்ட்டில் எதிரி கருப்பையா பிள்ளை மீது இ. பி. கோ. 408 வது பிரிவின்கீழ் காரைக்குடி போலீசாரால் வழக்குத் தொடரப்பட்டதில் கனம் ஜாயிண்டு மாஜிஸ்திரேட் அவர்கள் 19-2-36வ எதிரியைக் குற்றவாளியெனத் தீர்மானித்து எதிரிக்கு 1 வருடம் கடுங்காவல் தண்டனை விதித்தனர்.

## "தெருத்திண்ணை, கொட்டகை பொது ஸ்தலமல்ல"

### நடராஜபுரம் சூதாட்ட வழக்கின் தீர்ப்பு

(நமது நிருபர்)

தேவ, பிப்ரவரி 18உ

நடராஜபுரம் ராமனுதன் செட்டியார், நாராயணசாமி செட்டியார், வைத்திலிங்கம் அம்பலம் ஆகியோர்பொதுஸ்தலத்தில்சூதாடியதாகக் குற்றஞ் சாட்டப்பட்டு சூதாட்டச் சட்டம் III-ன்படி திருப்பத்தூர் தாலுகா மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் தலைக்கு ரூ 40 அபராதமும் தவறினல் 1 வாரம் கடுங்காவலும் விதிக்கப்பட்டனர்.

தண்டனை விதிக்கப்பட்ட எதிரிகள் கீழ்க் கோர்ட்டு உத்திரவை ரத்து செய்ய வேணுமாய் தேவகோட்டை ஜாயிண்டு மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் அப்பீல் செய்துகொண்டனர்.

அப்பீல்தார்கள் தரப்பில் சூதாடிய இடம் பொது ஸ்தலமல்லவென்றும், சொந்தமான புஞ்சை நிலத்தில் கொட்டகைபோடப்பட்டு அங்கு சூதாட்டம் நடைபெற்றதென்றும் ஆகையால் கீழ்க்கோர்ட்டு உத்திரவை ரத்து செய்ய வேணுமென்றும் வாதித்தனர்.

கனம் ஜாயிண்டு மாஜிஸ்ட்ரேட் அவர்கள் ஷை அப்பீலை ஒங்கீகரித்துத் தீர்ப்புச் செய்கையில் கூறியதாவது:—

லோயர் பர்மா சீப் கோர்ட்டு, தீர்மானத்தில் யாதொருவருடைய அனுபோகத்திலும் இல்லாத ஒரு சொந்தமான இடத்தில் நிர்மாணிக்கப்பட்ட கொட்டகை, ஷை சொந்தக்காரர் ஷை இடத்தை பொது உபயோகத்திற்கு விட்டிருப்பதாக யாதொரு சாக்ஷியமும் இல்லாதவரை, பர்மா சூதாட்டச் சட்டப்படி, சூதாடுபவர்கள் சூதாடக் கூடியிருக்கும் பொழுது, ஷை இடம் பொது ஜனங்கள் கூடிய பொது ஸ்தலமல்லவென்றும் சென்னை ஹைக்கோர்ட்டு நீதிபதி லெக்ஷ்மண ராவ் அவர்களின் தீர்ப்பில் ஒரு தனிப்பட்ட ஜாகையின் திண்ணை பொது ரஸ்தாவிற்குப் பக்கத்தில் பொது மக்கள் புழங்கக் கூடிய நிலைமையில் அமைக்கப் பட்டிருந்த போதிலும், அதுபொதுஸ்தலமல்லவென்றும் உள்ள தீர்மானங்களை பிராஸிகூட்டிங் சப் இன்ஸ்பெக்டரால் எதிர்க்க முடியவில்லை என்றும் ஆகவே கீழ்க்கோர்ட்டு உத்தரவை ரத்துசெய்து அபராதம் ஏற்கனவே கட்டப்பட்டிருந்தால் அதை வாபஸ் செய்யும்படி தீர்ப்புக் கூறுவதாக கனம் ஜாயிண்டு மாஜிஸ்டிரேட் அவர்கள் கூறினர்கள்.

### இந்தோ சைன செட்டியார் சங்கம் (செய்கோன்)

(ஒரு நிருபர்)

யுவ வருடம் தை மாதம் 20-ஆம் தேதி 2-2-36 மாலை 5 மணிக்கு ஐந்தாவது ஆண்டு பனிரெண்டாவது நிர்வாகசபைக் கூட்டம் திரு. நா. மா. அழகப்ப செட்டியார் அவர்கள் தலைமையில் கூடியது. 11 அங்கத்தினர்கள் விஜயம் செய்திருந்தனர்.

#### தீர்மானங்கள்.

1. 1935-ஆு டிசம்பர் மாதம் முதல் 1936-ஆம் வருடம் ஜனவரி மாதத்து சங்கத்து நடபடிக்கை விபரங்கள் வாசித்துக் காண்பித்து அங்கீகரிக்கப்பெற்றன. 2. மேற்படி மாதத்து கணக்கு விபரங்கள் வாசித்து காண்பித்து அங்கீகரிக்கப்பெற்றன. 3. திரு. பி. அ. பி. மு. பிச்சப்ப செட்டியார் அவர்கள் தனக்கு ஒத்தாசை செய்யவேண்டுமென்று நமது சங்கத்திற்கு எழுதின கடிதத்தை விளக்க நீதிபதி அவர்களிடம் கொடுத்திருக்கிறபடியால், அக்கடிதம் வந்தபின் பிறகு, அது விஷயமாக முடிவு செய்வதாகத் தீர்மானிக்கப்பெற்றது. 4. சங்கத்தில் வேலை செய்யும் அன்னங்காரனுக்கு பெப்ரவரி மாதமுதல் மாதம் ஒன்றுக்கு 25 $ 00 வீதம் சம்பளம் கொடுக்கிறதென்று தீர்மானிக்கப்பெற்றது. 5. நமது சங்க நிர்வாகசபைக் கூட்டங்களிலும் பொதுக்கூட்டங்களிலும் நகரத்தார்கள் மாத்திரம் கலந்துகொள்ளுகிறதென்று தீர்மானிக்கப்பெற்றது. 6. நமது சங்கத்து விதிகளைத் திருத்தம் செய்து அடுத்த பொதுக்கூட்டத்தில் அங்கீகாரத்துக்கு கொண்டுவருகிறதென்று தீர்மானிக்கப்பெற்றது. பிறகு காரியதரிசி அவர்களால் வந்தனங் கூறப்பெற்று மாலை 6-30 மணிக்கு கூட்டம் இனிது நிறைவேறியது.





# இரங்கோனில் குமரன் ஆசிரியர்

## செட்டியார்கள் சங்கத்தில் பாராட்டுக் கூட்டம்

### திரு. நாச்சியப்ப செட்டியாரவர்கள் தலைமையுரை

"பொதுஜன சேவையில் ஈடுபட்டவர்கள் பிழைக்கத் தெரியாதவர்களென்று அக்காலத்தில் பரிகசிக்கப்பட்டார்கள். சில சமயங்களில் அன்னார்களுக்கு நிறைய வசைமொழிகளும் கிடைக்கும். பொதுக்காரியங்களில் ஈடுபடுவதைவிட இறந்து விடுவது மேலென்று தோன்றும். அப்பேர்ப்பட்ட காலத்தில் இவ்விருவர்களும் (திரு. சொ. முருகப்பா அவர்களும், திரு. பிச்சப்பா சுப்பிரமணியன் அவர்களும்) சமூகத்தொண்டிலிறங்கி இன்னும் சலியாது தங்களாலியன்றது செய்துவருகின்றனர்" என்று கூறி இரங்கூன் செட்டியார் சங்கத்தலைவரான திரு. சா. ராம. மு. சித. மு. நாச்சியப்ப செட்டியாரவர்கள் திரு. முருகப்பாவையும், திரு. பிச்சப்பாவையும் வரவேற்றார்கள்.

(நமது நிருபர்)

குமரன் ஆசிரியர் சொ. முருகப்பா அவர்களும் திரு. மு. மரகதவல்லியாரவர்களும், திரு. பிச்சப்பா சுப்பிரமணியனவர்களும் ஆத்தங்குடி திரு. பெ. நா. மு. முத்துப் பழனியப்ப செட்டியாரவர்கள், J. P. குடும்பத்தினரும் பிப்ரவரி 17உ இங்கு நண்ணிய "எதியோபியா" கப்பலில் பகல் 2 மணிக்கு வந்திறங்கினார்கள். நாட்டுக்கோட்டைச்செட்டியார்சங்கத்தலைவர் திரு.மு. சித. மு. நாச்சியப்ப செட்டியாரவர்களும், ஷை சங்கக் காரியதரிசி திரு. சுப. க. அ. லெட்சுமணன் செட்டியாரவர்களும் மற்றும் ஏராளமான நகரப் பிரமுகர்களும் வரவேற்றார்கள். 18உ மாலை 5 மணிக்கு செட்டியார் சங்கத்தில் கூட்டம் நடைபெற்றது. சங்கத்தலைவர் திரு. சா. ராம. மு. சித. மு. நாச்சியப்ப செட்டியாரவர்கள் தலைமை வகித்துப் பின்வருமாறு முகவுரை வழங்கினார்கள்:—

பெரியோர்களே சபையோர்களே!

நேற்றுக் கப்பலில் இங்கு விஜயம் செய்துள்ள திருவாளர் சொ. முருகப்ப செட்டியார் அவர்களையும் திருவாளர் பிச்சப்பாசுப்பிரமணியன் செட்டியாரவர்களையும் நமது சங்கத்தில் வரவேற்குமுகத்தானும், அவர்களுடைய சொற்பொழிவுகளைக் கேட்டு மகிழ்வதற்கும் இன்று கூடியிருக்கிறோம். இவ்விரு கனவான்களையும் நம்மவர்களில் அறியாதார் இல்லை என்று சொல்லலாம். இவ்விருவருடைய புகழ் எங்கும் பரவியிருக்கிறது.

நம் நாட்டில் இதுகாலை அரசியல் உணர்ச்சி எங்கும் பொங்கித் ததும்புகிறது. சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்பதுவே எங்கும் பேச்சு. ஆனால் இருபது ஆண்டுகளுக்கு முன்னிருந்த நிலைமை வேறு. பொதுஜன சேவையிலீடுபட்டவர்கள் பிழைக்கத் தெரியாதவர்கள் என்று அக்காலத்தில் பரிகசிக்கப் பட்டார்கள். பல சமயங்களில் அன்னார்களுக்கு நிறைய வசைமொழிகளும் கிடைக்கும். பொதுக்கைங்கரியங்களில் ஈடுபடுவதைவிட இறந்துவிடுவது மேலென்று தோன்றும்.அப்பேர்ப்பட்ட காலத்தில் இவ்விருவர்களும் சமூகத்தொண்டிலிறங்கி இன்னும் சலியாது தங்களாலியன்றது செய்து வருகின்றனர். எனில் இவர்களது பெருமையை நீங்களே உணர்ந்துகொள்ளுங்கள். இவர்களுடைய முயற்சியினாலும், இவர்களது சகாக்களின் ஆதரவாலும் தனவைசிய ஊழியர் சங்கம் தோன்றியது. அதற்கு திருவாளர் சொ.முருகப்பசெட்டியாரவர்கள் காரியதரிசியாகவும் திருவாளர் பிச்சப்பா சுப்பிரமணியன்அவர்கள்முக்கிய உறுப்பினராகவும் இருந்துவந்தனர். தொண்ணூற்றாறூர் நகரத்தார்களை முதல் முதல் ஒன்றுகூட்டிய பெருமை தனவைசிய ஊழியர் சங்கத்திற்கு உரியது. அச்சங்கத்திலிருந்து தோன்றிய தனவைசிய ஊழியன் பத்திரிகைக்கு திருவாளர் சொ. முருகப்ப செட்டியாரவர்கள் பலகாலம் ஆசிரியராயிருந்தார்கள். எல்லோரும் எளிதில் அறியுமாறு இனிய நடையில் எழுதுவதில் இவர் கைதேர்ந்தவர். இவருடைய எழுத்து எல்லோரையும் கவர்ந்துவிடும். இவருக்கு நாவன்மையும் அதிகமுண்டு. ஆகவே பல இயக்கங்களில் இவர் ஈடுபட்டதில் ஆச்சர்யமொன்றுமில்லை. சமூக இயக்கம், சைவப்பிரசாரம், பிராமணரல்லாதாரியக்கம், சுயமரியாதைப் பிரசாரம் முதலிய பல்வேறு விஷயங்கள் இவரது ஆதாரவை அவ்வக்காலத்தில் பெற்றிருந்தது. சண்டமாருதம் தினப்பதிப்பு, குமரன் மாதப்பதிப்பு, குமரன் வாரப்பதிப்பு, முதலியவைகள் இவரது ஊக்கத்திலும் உணர்ச்சியிலும் தோன்றியவை. இவரது எழுத்தினாலும் பேச்சினாலும் பல வாலிபர்கள் புத்துணர்வு பெற்று இருக்கிறார்கள் என்பது மிகையாகாது. சீர்திருத்தில் ஆர்வம் இவர்க்கு மிகுதியுண்டு.

திருவாளர் பிச்சப்பா சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் சுமார் பத்தாண்டுகளுக்கு முன்னர் இளைஞர்கள் மகாநாட்டுத் தலைவராக இரங்கூன் வந்திருந்ததோடு, பர்மாவின் பல இடங்கட்குச் சென்று பிரசங்க மாரி பொழிந்துள்ளார்கள். பர்மாவில் ஊர் ஊராகச் சென்று பிரசங்கஞ் செய்த தனவணிகர்களில், திரு. பிச்சப்பா அவர்களே முதன்மையானவர்களென்று நினைக்கிறேன். அவர்களது அஞ்சா நெஞ்சமும், சீர்திருத்த ஆர்வமும், சமீபத்தில் நடந்த அவர்களது செல்வக் குமாரியின் திருக்கல்யாணமே வலியுறுத்தும். இவர் காந்திஜியின் அன்புக்குப் பாத்திரமானவர். கதர் அபிமானி.

இவ்விரு பெரியார்களை இந்நாட்டில் பார்க்கவும், அவர்களது பிரசங்கத்தைக் கேட்கவும் பாக்கியம் கிடைத்தமைக்கு நாம் அளவிலா மகிழ்ச்சி அடைகிறோம். இனி திருவாளர் முருகப்ப செட்டியாரவர்களை செட்டியார் சமூகமும் சீர்திருத்தமும் என்பதுபற்றி பேசுமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

குமரன் ஆசிரியர் திரு. சொ. முருகப்பா "செட்டியார்களும் சமூக சீர்திருத்தமும்" என்பதுபற்றிப் பேசியதன் சாரம் வருமாறு:—

இன்றையத்தினம் பெருமகிழ்ச்சியோடு இங்கே பேச எழுகின்றேன். அன்பும் ஆர்வமும் நிறைந்து பிரசன்னமளிக்கும் உங்கள் முன்பு இன்று ஒரு உபந்யாசம் செய்யும் பேறு கிடைக்குமென்று இரண்டு வாரங்கட்கு முன்பு நான் எதிர்பார்க்கவில்லை. கப்பல் புறப்படுவதற்கு மூன்று நாட்களுக்கு முன்புதான் பிச்சப்பா சுப்பிரமணியன் அவர்களின் பிரயாணம் நிச்சயமாயிற்று. நாங்களும் பயணம் வைத்தோம். ஆதலால் இங்குள்ள நண்பர் எவருக்கும் தாக்கல் கொடுக்க முடியவில்லை. ஆனால்நேற்று கப்பலடியில் வந்திருந்த நண்பர்களைக்கண்டு பெருமகிழ்ச்சியடைந்தேன். உங்களுடைய அன்பில்தான் எங்களுடைய குறைகள் கழுவப்பெறுகின்றன. சென்ற ஆண்டு மலாய் நாட்டுக்குச் சென்றேன். அவர்களுடைய அன்புக்கடலில் குளித்தேன். அன்பர்களே ! உலகில் மக்கள் வாழ்வு கூட்டுறவிலேயே இருக்கின்றது. ஒரே குழுவாக இருந்த மக்கள் கூட்டம் தொகையிற் பெருகப் பெருக தனித்தனி சமூகமாகப் பிரிந்தது. தனித்தனி மனிதனாக இருந்து வாழ இயலாது. எனவே பெருங்கூட்டமாகவும் சிறு கூட்டமாகவும் வாழவேண்டிய நிலைமை ஏற்படுகிறது. தேச வாரியாகவும் சமய வாரியாகவும் மக்கள் பிரிந்தனர். நம்முடைய தேசத்தைப் பொறுத்தவரை இந்திய தேசத்தார் என்றிருந்தோம். ஹிந்துக்களாகவே இருந்தோம். தேச முழுதும் ஒரே வகுப்பாக இருப்பது தான் ஒற்றுமைக்கும் வாழ்வுக்கும் சுலபமாக இருக்கும். நமது தேசம் இன்றெப்படியிருக்கிறது? மதத்தால் பிரிவுபட்டிருக்கிறோம். மதத்தினுள் கிளை மதங்கள் பலவிருக்கின்றன. அவற்றுள்ளும் சிறுவேறுபாடுகள் பல காண்கிறோம். அதிலும் எண்ணற்ற ஜாதிப் பிரிவுகள் உள்ளன. இவையெல்லாமிருந்தாலும் பொது வாழ்வு சரியாக இருக்குமானால் பாதகமில்லை. இவை பொது வாழ்வைச் சீர்குலைப்பதென்பதில் சந்தேகமாயிருக்கும்? இல்லை.

சமூகவாழ்வில் ஏற்படும் சிரமங்களைப் போக்கவே சீர்திருத்தம் தேவைப்படுகிறது. சமய சீர்திருத்தம் அரசியல் சீர்திருத்தம் சமூக வாழ்வில் சீர்திருத்தம் ஆகிய பலவகையான திருத்தமும் தேவைப்படுகிறது. சீர்திருத்தம் என்றும் நடந்துகொண்டேயிருக்க வேண்டும். பெரிய அழகான வீடுகட்டுகிறோம். பல வருஷங்கள் செல்கின்றன. வீடு ஒழுகஆரம்பிக்கிறது. அதைச்செம்மைப்படுத்த வேண்டியதவசியமல்லவா? இதுவரை ஒடு மாற்றியதில்லையாதலால் இனிமேலும் செப்பனிடவேண்டியதில்லை என்று கருதலாமா? செய்த காரியம் செம்மையாக இருக்கிறவரை வேண்டியதில்லை. சில கெட்டால் சீர்திருத்தம் இன்றியமையாததாகி விடுகிறது. அப்படியே ஜாவதிகதியில் இன்று கப்பல் சுலபமாக ஓடுகிறது. நாளை மண் நிறைந்து வழி மிதந்து விட்டால் என்ன செய்யவேண்டும்? உடனே சேற்றை அப்புறப்படுத்திச்சீர்திருத்தம் செய்யவேண்டும். இதுவரை சேறு எடுத்த வழக்கமில்லையென்று கப்பலை ஓட்டினல் மீளமுடியாமல் மாட்டிக்கொள்ளும். இப்படித்தான் காலக்கிரமத்தில் ஏற்படும் இடையூறுகளை நீக்கிச் சீர்ப்படுத்தி வாழ்க்கையைச் செம்மை செய்ய வேண்டியிருக்கிறது. அரசியலில் நாள்தோறும் சீர்திருத்தங்கள் ஏற்பட வேண்டியிருக்கிறது. சட்டங்கள் தினந்தோறும் சீர்திருத்தப்பட வேண்டிய நிலைமை ஏற்பட்டு வருகிறது. இந்தியன் பினல்கோடு சிவில் ஆக்ட்டுகளில் ஆயிரக்கணக்கான பிரிவுகள் உள்ளன. ஆனால் பல பிரிவுகளின்படி வழக்கே வருவதில்லை. அச்சட்டங்கள் காலக்கிரமத்தில் தேவையில்லாமல் போய்விட்டன. புதிய புதிய சட்டங்கள் செய்யப்படுகின்றன. அச்சட்டங்கள் அவசியமென்று கூறவில்லை. நியாயமாகவோ அநியாயமாகவோ ஜனநன்மைக்காகவோ அல்லது அவர்களை அடக்கியொடுக்கி நசுக்கவோ செய்யப்படுகின்றன. என்றாலும் காலத்திற்கும் மக்கள் நிலைமைக்கும் தக்கபடி சீர்திருத்த வேண்டியது தேவைப்படுகிறது. இல்லையேல் நிர்வாகம் செய்ய முடிகிறதில்லை. இது எந்த நாட்டுக்கும் எந்த சமூகத்திற்கும் ஒப்ப முடிந்த தொன்றாகும். சீர்திருத்தம் விழையாத நாடு முன்னேற்றத்திற்கு வெகுதூரத்திலிருப்பதைக் காணலாம். அந்நாட்டு மக்கள் மிகவும் கீழ் நிலையிலிருப்பார்கள் என்பதிலும் ஐயமில்லை.

செட்டியார் சமூகமும் தேசத்தில் சிறப்புற்றுள்ள சமூகமென்பதிலையமில்லை. நம் தேசத்தைப் பொறுத்த வரையில் கல்வியிலும் செல்வத்திலும் சிறந்த சமூகந்தான். 100 க்கு 95 பேர் படிப்பற்றிருக்கும் நமது நாட்டில் 100 க்கு நூறும் படித்தவர்கள் நகரத்தார் சமூகத்தினர். செல்வம் நிறைந்தவர்கள்தான். இந்நாட்டுவயல்களில் நெல் விளைவதாகக் கருதவில்லை. யாவும் விளைகிறதென்று கருதினார்கள். அது பொய்யல்ல. உண்மைதான். மலாயாவில் ரப்பர் மரங்கள் பாலை வடிக்கவில்லை. பணத்தைத்தான் வடித்தது என்றால் அது பொய்யல்ல. அப்படி விலை அவைகட்கு இருந்தது. இப்பொழுது நிலைமை தாறு மாறாகி விட்டது. சென்ற பல வருஷங்களாக கோடிக்கணக்கான பொருளைச் சம்பாதித்தோமே! அவையெங்கே? பல வருஷ சம்பாத்தியம் நாலைந்து வருஷப் பஞ்சத்தைத் தாங்க முடியாமற் போய்விட்டதே? தேடிய பணத்தைச் செம்மையாக நாம் வைத்துக்கொள்ளவில்லை. இராமநாதபுரம் ஜில்லாவில் பெரிய பெரிய வீடுகளை லட்சக்கணக்கில் செலவிட்டுக் கட்டினோம் பண நெருக்கடி காலத்தில் இரண்டு லட்சம் ரூபா வீடு 20 ஆயிரத்திற்கு விற்க இயலவில்லை. வாடகை வரும்படி ஒரு சல்லிகூடக் கிடையாது. ரங்கூன், சென்னைபோன்ற இடங்களில் கட்டப்பட்டிருந்தால் ஏதாவது சிறு தொகையாவது வரும்படிக்கு இடமிருக்கும். வீட்டில் பெரும் பெரும் பணத்தை முடக்கினோம். பித்தளை, மங்கு, மாவை முதலிய சாமான்களை வாங்கி அடைந்தோம். ஆபத்து நேரத்தில் உபயோகமில்லாமற் போய் விட்டது. விசேஷ காலத்தில் பதினாயிரக் கணக்காக அழித்தோம். பணக்கஷ்ட காலத்தில் உதவிக்கு ஆகும்படி நாம் செய்துகொள்ளவில்லை. இதைத்தான் 20 வருஷகாலமாகக் கூறி வருகிறோம். இனிப் பலதுறைகளில் புகுந்து தொழில் செய்யவேண்டும். வீண் செலவினங்களை அடக்கவேண்டும். பெண் மக்களைப் படிக்க வைத்தால்தான் வாழ்க்கை செம்மைப்படும். கம்பை கல்வி நிலயம் பர்மா நகரத்தாருக்கும் மிகுந்த பெருமையை அளித்து நிற்கிறது. இதைப் போல பெண்கட்கும் ஒரு நிலயங்காணும் பெருமையும் பர்மா நகரத்தாருக்கு கிடைக்கலாமென்று நான் கருதுகிறேன். கம்பை நிலயத்திற் பயிலும் மாணவர்களை வெளிநாட்டுக்கனுப்பி தொழிற்கல்வி கற்றுவர ஏற்பாடு செய்யவேண்டியதவசியமாகும். ஒவ்வொரு ஊர் நகரத்தார் ஒவ்வொரு மாணவனை அனுப்ப ஏற்பாடு செய்யலாம். மலாய்நாட்டிலுள்ள நகரத்தாரும் தனித்தனியாகவுள்ள செல்வர்களும் இம்மாதிரி செய்ய முன்வரவேண்டும்.

(12-ம் பக்கம் பார்க்க)

# குமரன்

காரைக்குடி
யுவ-ஹு மாசிமீ 15-உ


## ஹிந்து சமூகம்.

உயர் ஜாதி ஹிந்துக்கள் தங்களை நாகரிகத்தில் முதிர்ந்தவர்களென்றும், கல்வியறிவு பெற்றவர்களென்றும் கூறிக்கொண்டபோதிலும் பல விஷயங்களில் தாழ்ந்த ஜாதி ஹிந்துக்களைக் காட்டிலும் மிகக் கீழான நிலையிலேயே இருந்து வருகின்றனர். கல்வியறிவற்ற அநாகரிகக் கூட்டமென்று கூறப்படும் தாழ்ந்த ஜாதி ஹிந்துக்களிடையில் வரதக்ஷிணை, வைதவ்யம் ஆகியவைகளில் கொடுமையான சம்பவங்கள் நடைபெற்ற செய்தியை எவரும் கேட்டிருக்கமுடியாது. வரதக்ஷிணைக் கொடுமையையும் பால்ய விதவைகளின் துயரத்தையும் ஒழிக்கவேண்டுமென்று பல ஆண்டுகளாக அறிஞர்கள் கூறிவருகிறார்களாயினும், ஹிந்து சமூகம் அதிற் சிறிதேனும் கவனம் செலுத்தவில்லை. அக்கொடுமைக்குப் பலியான பல செய்திகள் வந்துகொண்டே யிருக்கின்றன. உலக வாழ்வின் இன்ப நுகர்ச்சியை அனுபவிக்கவேண்டிய வயதில், ஹிந்து சமூகத்தில் பிறந்ததின் காரணமாக தற்கொலை புரிந்துகொள்ளும்படியும் வாழ்விழந்து இருக்கும்படியும் நேரிடுமானால் அதனால் ஏற்படும் அவமானம் ஹிந்துக்களுக்கேயல்லவா?

ஹிந்து சமூகத்திலிருந்து வரும் வரதக்ஷிணை வைதவ்யம்போன்றகொடுமைகள் பிராமணர், முதலியார், செட்டியார் என்ற வகுப்பு வேற்றுமை கொண்டு காணப்படவில்லை. ஹிந்து சமூகத்தில் பிறந்த பல்வேறு வகுப்பினருள்ளும் அவைகள் தாண்டவமாடுகின்றன. "இரண்டு லட்சம் ரூபாய் ஆஸ்தியுடையவனுக்கு நான்கு பெண்கள் இருக்குமானல், நான்காவது பெண்ணுக்கு விவாக முடித்தவுடன் இன்சால்வெண்ட் பெட்டிஷன் போட அவன் தயாராயிருக்க வேண்டும்" என்று விவாக விஷயமாக ஒரு தனவணிகப் பெரியார் கூறிய சொற்கள் முற்றும் உண்மையேயாகும்.

உலக வாழ்வில் இன்றியமையாத விவாக விஷயம் மற்ற மதஸ்தர்களிடையில் எவ்விதக் கஷ்டமுமின்றிச் சர்வ சாதாரணமாக நடைபெறுகிறது. ஹிந்து சமூகத்தில் விவாக விஷயத்தில் ஏற்படும் கஷ்டங்கள் அளவிட முடியாதன. அதனை நிவர்த்தித்து விவாக விஷயம் சர்வ சாதாரணமாகும்படி செய்தல் ஹிந்து சமூகத்தில் பிறந்த ஒவ்வொருவரின் கடமையாகும். சென்ற சில மாதங்களுக்கு முன்னர் இந்திய சட்டசபையில் வரதக்ஷிணை போன்ற கொடுமைகளை ஒழிக்கும்பொருட்டு ஒரு மசோதா வந்திருப்பதாக செய்தி கிடைத்தது. அதற்கப்பால் அம்மசோதா எந்நிலையிலிருக்கிறதென்பதைப்பற்றிய தகவலே இல்லை. இப்பொழுது விதவைகள் துயரைப் போக்கும் பொருட்டு ஒருமசோதா இந்திய சட்டசபைக்கு வந்திருப்பதாகச் செய்தி கிடைத்திருக்கிறது. இந்திய சட்டசபையில் அங்கம் வகித்திருக்கும் அங்கத்தினர்கள் நாட்டின் பெரும் பாலான ஒரு சமூகம், படும் அவஸ்தையினின்றும் விடுபட சட்டமூலம் தக்க ஏற்பாடுகள் செய்ய வேண்டியது அவசியமாகும்.

சமூகத்தில் இரக்கமற்ற இத்தகைய நிர்ப்பந்தங்களால் ஏற்படும் பெருங்கொடுமையான சம்பவங்களைச் சட்டத்தின் உதவியாலன்றித் தளர்த்த முடியாதென்பது பிரத்தியட்ச உண்மை. சட்டசபையில் இருக்கும் சமூக சீர்திருத்த வாதிகள் தங்கள்மீது சுமத்தப்பட்டிருக்கும் பெரும்பொறுப்பை சரியானபடி உணர்ந்து நடக்க முற்படுவார்களா?

## உள்ளூர்ச் செய்தி

காலநிலை:—சனிக்கிழமை இரவும் செவ்வாய்க்கிழமை ராத்திரியும் காரைக்குடியில் சுமாரான மழை பெய்தது.

### திருவள்ளுவர் வாசகசாலை வேந்தன்பட்டி

இவ்வாசகசாலைக்கு திருவாளர் ந. கு. அரு. குப. அருணசலஞ் செட்டியார் தமது புதல்வி திருவளர் செல்வி பாப்பாயிக்கு ஐப்பசி மீ 30உ நடைபெற்ற காப்புக்கட்டுப் புதுமையில் ரூ 5-ம், திருவாளர் சா. பெரி. ஏ. பெரியகருப்பன் செட்டியார் தமது புதல்வன் திருவளர் செல்வன் ஏகப்பனுக்கு நடைபெற்ற காப்புக்கட்டுப் புதுமையில் ரூ 5ம், திருவாளர் மெ. பழ. நாகப்ப செட்டியார் தமது குமாரர் திருவாளர் மெய்யப்ப செட்டியாருக்கு நடைபெற்ற திருமணத்தில் ரூ 5ம், திருவாளர் தெ. பழ. அ. பழநியப்ப செட்டியார் தமது குமாரர் திருவாளர் அழகப்ப செட்டியாருக்கு நடைபெற்ற திருமணத்தில் ரூ. 5ம், திருவாளர் முரு. அ. இராமசாமி செட்டியார் தமது குமாரத்திசௌபாக்கியவதி ராமாயிக்கு நடைபெற்ற திருமணத்தில் ரூ. 5ம், திருவாளர் பழ. வெ. பழநியப்ப செட்டியார் தமது சகோதரர் திருவாளர் அழகப்ப செட்டியாருக்கு நடைபெற்றதிருமணத்தில் ரூ 5ம் சம்பாவனை செய்துள்ளார்கள். இவர்களுக்கு வாசகசாலையாரின் மனமார்ந்த நன்றி உரியதாக என்று காரியதரிசி மு. வெங்கடாசலம் செட்டியார் எழுதுகிறார்.

### புதுவயல் ஸ்ரீ சரஸ்வதி சங்கம்

இச்சங்கத்தின் 14-வது ஆண்டு 10-வதுமாதக்கூட்டம் 19-2-36உமாலை 5 மணிக்கு திரு. எஸ். எஸ். மணி பி. ஏ. ஹானர்ஸ் அவர்கள் தலைமையில் ச. வி. மாணவ மாணவிகளின் பாட்டு பேச்சு நடிப்புகள் நடைபெற்றதும் மதுரமித்திரன் ஆசிரியர் திரு. என். சுப்பிரமணியம் அவர்கள் தமிழின் பெருமை என்ற விஷயத்தை நீண்ட நேரம் தகுந்த மேற்கோள்களுடன் உபந்யாசித்ததும் சங்கத் தலைவர் வந்தனம் கூற கூட்டம் நன்கு நிறைவேறியது.

நன்கொடை

இச்சங்கத்திற்கு இந்நகர் திரு. ப. வடு. பெரி. ராம. காசிச் செட்டியாரவர்கள் புதல்வன் அருணசலத்துக்கு 20உ நடந்த திருமணத்தில் ரூ. (5) ம் பெரி. வீர. ராம. பெரியணன் செட்டியாரவர்கள் புதல்வி சோலைச்சிக்கு தை மாசம் 28உ நடந்த திருமணத்தில் ரூ. (11) ம் நன்கொடை தந்துள்ளார்கள் அவர்கட்கு நமது நன்றி உரியதாகுக எனக் காரியதரிசி அறிவிக்கிறார்.

### கார் மோதியது

(ஒரு நிருபர்)

கோட்டையூர் ஒலிம்பிக் டாக்கீஸைச் சேர்ந்த மோட்டார் சென்ற திங்களன்று காரைக்குடியிலிருந்து வரும்பொழுது கோட்டையூர் ரயில்வே கேட்டில் மோதியதாகவும் அதனல் கேட்டின் கதவிற்கு சேதமேற்பட்டிருக்கிறதெனவும் தெரிகிறது.

## காலண்டர் வரவு

சென்னையில் பிரபல போட்டோ என்கிரேவர்களும், ஆர்ட்டிஸ்டிக் பிரிண்டர்களுமான சோல்டன் கம்பெனியாரின் 1936-ம் வருஷத்திய காலண்டர் வரப்பெற்றோம். நல்ல தாளில் பெரிய எழுத்துத் தேதிகளுடனும் தமிழ்மாதத் தேதிகளுடனும் காலண்டர் அழகாக விளங்குகிறது.

பிரபல பேப்பர் வியாபாரிகளான சென்னை ஆனந்தக்கிருஷ்ண கம்பெனியாரின் புதுவருஷக் காலண்டர் கிடைக்கப்பெற்றோம். பெரிய எழுத்தில் இரண்டு கலர்த் தேதிகளுடன் அழகிய தாளில் காலண்டர் அச்சிடப்பட்டிருக்கிறது.

## பாசியனில் தனவணிக தம்பதிகள்

### வரவேற்பு

புவ ஆண்டு தைத்திங்கள் 23-ம் நாள் பகல் 12 மணிக்கு பள்ளத்தூர் திரு. அ. ராம. ராமன்செட்டியார் தம்பதிகள் இவண் வந்து சேர்ந்தார்கள். இவண் நகரப்பிரமுகர்களும் ஏனைய பல அன்பர்களும் கப்பல் துறைமுகம் சென்று முறையே திரு. சித. ப. மு. சொ. பழனியப்ப செட்டியாரவர்களாலும் பாரதி சங்கத் தலைவர் கரு. நாகப்பசெட்டியாரவர்களாலும் மாலை அணிவிக்கப்பெற்று தம்பதிகள் வரவேற்கப்பட்டார்கள் என்று பாரதி சங்கக் காரியதரிசி எழுதுகிறார்.

### விஸ்வகர்ம வாலிபர் சங்கம் தேவகோட்டை

(ஒரு நிருபர்.)

சென்ற 22—2—36 சனிக்கிழமை மாலை 6-30 மணிக்கு மூன்ருவதாண்டு முதன் மாதக்கூட்டம் சங்கத் தலைவர் உயர்திரு P. L. S. சங்கரன் ஆச்சாரி அவர்கள் தலைமையில் நடைபெற்றது.

திரு. சா. ஈசுவரமூர்த்தி ஆச்சாரி அவர்கள் சாதியக் கொடி வணக்கம் பாடியதும் தலைவர் முகவுரை கூறினர்.

அவ்வமயம் காரியதரிசியால் சென்ற மாதத்து மகாஜனக் கூட்ட நிகழ்ச்சியும், சென்னை கவர்னர் அவர்களிடமிருந்து கிடைத்த கடிதமும் படிக்கப்பட்டதும், கல்வி எனும் பொருள்பற்றி திரு. S. T. திருநாவுக்கரசு ஆச்சாரி அவர்கள் பேசினர்கள்.

பின்னர் திருச்சி விஸ்வகர்ம இளைஞர் கழகக் காரியதரிசி திரு N. R. பத்மநாபன் அவர்கள் 'அன்றும் இன்றும்' எனும் பொருள்பற்றி நீண்டதோர் சொற்பெருக் காற்றினர்கள்.

இறுதியாக தலைவர் முடிவுரை கூறவும், காரியதரிசியால் நன்றிமொழி பகரப்பட்டு இரவு 9-30 மணிக்கு கூட்டம் இனிது கலைந்தது.

### தஞ்சை ஜில்லா 5-வது சுயமரியாதை மகாநாடு

திருத்துறைப்பூண்டி தோழர் டி. எம். உத்திராபதி அவர்கள் இல்லத்தில் 21-2-36-ந்தேதி மாலை ஒரு கூட்டம் நடந்தது. அடியில்கண்டபடி முடிவுசெய்யப்பட்டது:—

இயக்கத் தோழர்கள் வேண்டுகோளுக்கிணங்கி திருத்துறைப்பூண்டி தாலுகா சுயமரியாதை மகாநாட்டை தஞ்சை ஜில்லா 5-வது சுயமரியாதை மகாநாடாக திருத்துறைப்பூண்டியில் நடத்திவிடுவதென்றும் மகாநாட்டை மார்ச்சுமீ 21, 22 தேதிகளில் நடத்துவதென்றும் மகாநாட்டிற்கு கே. எம். பாலசுப்பிரமணியம் அவர்களை தலைமை வகிக்கவேண்டுமென்றும்,

மகாநாட்டிற்கு தோழர்கள் பி. கே. எம். ஷேக் அப்துல்காதர் அவர்களை வரவேற்புக்கழகத் தலைவராகவும், டி. எம். உத்திரபதி அவர்களை பொதுக் காரியதரிசியாகவும், எஸ். சுந்திரேசன் அவர்களை பொக்கிஷதாராகவும் தீர்மானித்ததோடு காரியக்கமிட்டி அங்கத்தினர்களாக ஜில்லாவின் பலபாகத்திலும் 24 பேர்களை நியமனம் செய்வதென்றும், தீர்மானிக்கப்பட்டது.

டெலிகேட் கட்டணம் 0-8-0 என்றும் வரவேற்புக்கட்டணம் 1-0-0 என்றும் தீர்மானிக்கப்பட்டது.

### இலங்கை ராஜாங்க சபைத் தேர்தல்

பிப்ரவரி 22உ கொழும்பு நகரிலும் வேறு ஒன்பது இடங்களிலும் அமைதியாகத் தேர்தல் நடைபெற்றது. காலி தொகுதியில் மட்டும் சிறு சச்சரவுகள் ஏற்பட்டு அறுவர் காயமடைந்தனர்.

கேட் முதலியார் ஏ. ஈ. ராவபாஸியும் டி. எஸ். டிபான்ஸெகாவும் தேர்ந்தெடுக்கப்பெற்றனர்.

## தேவகோட்டை பஞ்சாயத்து போர்டு

### தலைவர் தேர்தல்

தேவகோட்டை, பிப் 25

இந்த போர்டின் தலைவர் தேர்தல் நேற்று மாலை நடைபெற்றது. 12 காங்கிரஸ் அங்கத்தினர்களும் காந்தி குல்லாய் அணிந்து வந்திருந்தார்கள். ஸ்ரீமான் முத்து கரு. அரு. கரு. அருணசலம் செட்டியாரவர்களைத் தலைவராகவும், ஸ்ரீமான் பி. ஆர். கே. சொக்கலிங்கம் சேர்வையவர்களை உபதலைவராகவும் தேர்ந்தெடுத்திருக்கின்றனர்.

## அபிஸீனிய யுத்தம்.

பிப், 22உ

வடக்குப் போர்முனையில் இத்தாலியர் வசமான எல்லைக்கப்பால் எதிரிகளை அபிஸீனியர் துவம்சம் செய்துவிட்டுத் திரும்பிவிட்டதாக கொஜ்ஜம் கவர்னர் ராஸ்இம்று சொல்லுகிறார். அக்ஸூமுக்கு மேற்கே தலைமை ஸ்தானத்திலிருந்து இருபடைப் பிரிவுகள் மாரெப் நதிப்பக்கம் அனுப்பப்பட்டன. இத்தாலியர் போக்குவரவு மார்க்கங்களைத் தாக்குவது இவர்களது நோக்கம். 15 ஆயுதக் கிடங்குகளையும் இரு டாங்கி டிப்போக்களையும் அழித்துவிட்டு அவர்கள் திரும்பினர். 412 இத்தாலிய வெள்ளையர் கொல்லப்பட்டனர்.

சர்வதேச சங்கப் பதினெண்மர் கமிட்டி எண்ணெய் நிர்ப்பந்த முறையை ஆலோசிப்பதற்காக மார்ச் 2-ந்தேதி கூடும்.

### விமானக் காதல் வழக்கு எதிரிக்குக் கடுங்காவல்

பம்பாய், பிப் 25.

விமானக் காதலர் வழக்கின் எதிரியான ஸ்ரீமான் கபூருக்கு பம்பாய் ஆருவது பிரஸிடென்ஸி மாஜிஸ்திரேட் ஒவ்வொரு குற்றத்திற்கும் 3 மாதக் கடுங்காவலும் 500 ரூபாய் அபராதமும் விதித்தார். தண்டனைகளை ஏக காலத்தில் அனுபவிக்க வேண்டுமென்பது தீர்ப்பு. அதை மாஜிஸ்திரேட் படிக்க 3 மணி நேரமாயிற்று. கோர்ட்டில் ஏராளமான ஜனங்கள் கூடியிருந்தனர்.

### 'காந்திஜி நடனம்'

காந்திஜி நடனமாடுவது போன்ற ஒரு சிறு சினிமாப் படத்தை மதுரை சிடி சினிமாவில் காண்பித்தார்கள். அது அப்பெயரை அவமதிப்பதாகுமென திரு. ஏ. வைத்தியநாதய்யர் முதலியவர்கள் ஆட்சேபித்ததனுல் சினிமா நிர்வாகிகள் அதைக் காட்டாமல் நிறுத்திவிட்டார்கள்.

### புதிய நாணயங்கள் எட்வர்ட் மன்னரின் சின்னம் கோண்டது

கல்கத்தா, பிப் 22.

எட்டாவதுஎட்வர்ட்மன்னரின் சின்னங்கொண்ட நாணயங்கள் இந்தியாவில் வழங்குவதற்கு இன்னும் ஒரு வருஷ காலம் பிறக்குமென்று தெரிகிறது. இங்கிலாந்திலிருந்து இந்தப் புதிய நாணயங்களுக்கு அச்சுகள் வந்து சேரவேண்டும். பம்பாயிலும், கல்கத்தாவிலுமுள்ள நாணயச் சாலைகளுக்கு இந்த அச்சு வந்து சேரவேண்டும். அதற்குப் பிறகு இங்கிருக்கும் நாணயங்களுக்குத் தகுந்தபடி அந்த அச்சைக் குறுக்க வேண்டுமாம். இதற்கும் நாணயங்கள் போதிய அளவு இந்தியாவில் வழங்கவும் 4 அல்லது 6 மாதங்களாவது பிடிக்கும். காலஞ் சென்ற மன்னரின் சின்னங் கொண்ட நாணயங்கள் முதன் முதல் இத்தேசத்தில் வழங்குவதற்கு ஒரு வருஷத்திற்கு மேல் பிடித்ததென்பது இது சம்பந்தமாக் கவனிக்கத் தக்கது.



## மலாய்நாட்டுச் செய்திகள்

(நமது நிருபர் ஏர்மெயில்)

### பிரிட்டிஷ் கவர்ன்மெண்டுக்கு மலாயின் சன்மானம்

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் பாதுகாப்புக்காக ஸ்ட்ரெயிட்ஸ் செட்டில்மெண்டு கவர்மெண்டார் வருடந்தோறும் 4,000,000 வெள்ளி செலுத்திவருவது போதாதென்று சென்ற மூன்று வருடங்களாக வருடத்திற்கு 500,000 வீதம் சட்டசபையில் அநுமதி பெற்று வழங்கப்படுகிறது. இதுமாதிரி மலாய்நாட்டிலிருந்து பிரிட்டிஷ் ஏகாதிபத்திய கவர்மெண்டுக்கு மகாயுத்தம் முடிவடைந்ததிலிருந்து இதுவரை 100,000,000 வெள்ளி கொடுக்கப்பட்டிருப்பதாகக் கணக்கிடப்பட்டிருக்கிறன.

### மணிலெண்டர்ஸ் சட்டம்

1935-ம் வருடம் ஜுன் மாதம் 15-ம் தேதியன்று வெளியான விசேஷ எஸ். எஸ். கெஜட் விளம்பரத்தில் அந்தந்த ஊர் அபிசியல் அசைனி மணிலெண்டர்ஸ் ரிஜிஸ்ட்ராராக நியமிக்கப் பட்டிருக்கிறார் என்ற விஷயம் திருத்தப்பட்ட சட்டத்தின்படி உத்தியோகஸ்தர் தேவை யில்லாததினல் ரத்து செய்யப் பட்டிருக்கிறது என்று பிப்ரவரி 14உ கெஜட் மூலம் தெரிகிறது.

### நிலச்சுக்கையை கிஸ்தியாகக் கட்டும் விஷயம்

எஸ். எஸ். கவர்மெண்டில் நிலச்சுக்கையை கிஸ்தியாகச் செலுத்துவதற்கு விசேஷ அதிகாரம் ரெசிடெண்ட் கவுன்சிலரால் அந்தந்த டிஸ்ட்ரிக்ட் ஆபீசர்களுக்கு உத்திரவு கொடுக்கப்படலாமென்று உள்ள சட்டத்தை யனுசரித்து பாசின் கலெக்டருக்கு செட்டியார்கள் சங்க அங்கத்தினர் ஒருவர் எழுதிக் கேட்டதில் உத்திரவு தர முடியாதென்று பதில் கொடுத்ததால் சங்கச் சார்பில் மலாக்கா ரெசிடெண்ட் கவுன்சிலருக்கு எழுதி நம் சமூகத்தாருக்கு பொது உத்திரவு தரவேண்டுமென்று கேட்டதில், பொதுவில் உத்திரவு தர முடியாதென்றும், ஒவ்வொருவரும் தனிப்பட்ட முறையில் நிலமிருக்கும் அந்தந்த டிஸ்ட்ரிக்ட் கலெக்டருக்கு எழுதி கிஸ்தியாகச் சுக்கையைச் செலுத்த அநுமதி கேட்டால் ஒவ்வொன்றின் தன்மையை உத்தேசித்து உத்திரவு அநுமதிக்கப்படுமென்று மலாக்கா ரெசிடெண்ட் கவுன்சிலர் தெரிவித்திருக்கிறார்.

### ரப்பர் மார்க்கெட்

லண்டன் நியூயார்க் ரப்பர் மார்க்கெட்டுகள் உறுதியாயிருந்து ரப்பர் சாஸ்தியாய் அங்கு வாங்கப்படுவதால், விலை ஏறிக்கொண்டு வருவதுடன் சிங்கப்பூர் ரப்பர் மார்க்கெட்டும் மிக்க உறுதியாயிருந்தது. எப்படி யிருந்தாலும் ரப்பர் வியாபாரிகளுக்குப் போதுமான நம்பிக்கை இன்னும் உண்டாகவில்லை. ரப்பர் விலை கூடிக்கொண்டே வந்திருப்பதால், இப்பொழுதுதான் ஷேர் மார்க்கெட்டும் உறுதியடைந்திருக்கிறது. லண்டன் நியூயார்க் ரப்பர் விலையும் கூடியிருப்பதால் ஷேர் மார்க்கெட்டில் ஸ்திரமான நிலைமை நீடித்திருக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

### ரப்பர் மார்க்கெட்

லண்டன் ரப்பர் மார்க்கெட் அமைதியாயும், நியூயார்க் மார்க்கெட் மந்தமாயும் இருப்பதாகத் தெரிவதால் சிங்கப்பூர் ரப்பர் வியாபாரிகள் விலை ஏறக்கூடுமென்று எண்ணி விற்க மனமில்லாமலிருக்கிறார்கள், ரப்பர் விலை இப்போது குறையுமென்று தோன்றவில்லை. ரப்பர் ஷேர்களுக்கு கொஞ்சம் கிராக்கியிருக்கிறது. எல்லாவிதமான ஷேர்களையும் வியாபாரிகள் வாங்குவதால் ஷேர் மார்க்கெட் பகுதி நிதானமாயிருக்கிறது.

இவ்வருடத்தில் செலவாகும் ரப்பர் எவ்வளவு என்று தெளிவாய் அறியமுடியாதுபோனலும் சுமார் 950,000 டன் ரப்பருக்கு மேல் செலவாகுமென்று ஒரு நிபுணர் தெரிவிக்கிறார். ஆனல் உலகத்தில் இவ்வருடத்தில் ஏற்படவிருக்கும் அரசியல் கலகத்தால் உலக வியாபாரம் அதிகமாய் பாதிக்கப்படும் ஆதலால் எதுவும் நிச்சயமாய்ச் சொல்ல இயலாதென்று தெரிவிக்கிறார்.

### ரப்பர் விலை சிங்கப்பூர்

| | | |
|---|---|---|
| பிப்ரவரி | 15உ | $ 34—50 |
| | 17உ | ,, 34—67 |
| | 18உ | ,, 34—50 |
| | 19உ | ,, 34—17 |

## காரைக்குடி நடராஜா டாக்கீஸ்

நவீன நாகரிகத்திற் கேற்றபடி உயர்தரமான மேல்நாட்டு முறையில் ஏராளமான வசதிகளுடன் சுமார் 60 ஆயிரம் ரூபா செலவில் காரைக்குடி கிழ ஊரணி தென்கரையில் கட்டப்பட்டு வரும் சினிமாத் தியேட்டரானது ஏறக்குறைய பூர்த்தி யடைந்துவிட்டது. அதன் வேலைகள் மிக துரிதமாக நடைபெற்று வருகின்றது. காரைக்குடி முனிசிபல் கௌன்சிலர் திருவாளர் மெ. செ. ராமசாமி செட்டியாரவர்களின் மேல்பார்வையில் கட்டடம் கட்டப்பட்டிருக்கிறது. தென்னுட்டிலேயே இத்தகைய கட்டிடம் பொதுஜன சௌகர்யத்தை உத்தேசித்துக் கட்டப்பட்டதில்லை யென்று கூறலாம். இதன் ஆரம்ப விழா வெகு சீக்கிரத்தில் நடைபெறும். முதன்முதலில் "பாமா விஜயம்" நடத்தப்படுமென்று தெரிகிறது.

### காதிபந்தர் திறப்புவிழா.

(நமது நிருபர்)

காரைக்குடி, 25-2-36

24—2—36உ மாலை 3-30 மணிக்கு கல்லுக்கட்டி மேல்கரையில் மாஜி A. I. S. A. மானேஜர் டி. கே. முத்துச் செட்டியாரவர்களால் நிர்மாணிக்கப்பட்ட "காதிபந்தர்" என்ற வஸ்திராலயத்தின் திறப்புவிழா சிறப்பாக நடைபெற்றது.

வஸ்திராலய நிர்வாகி வந்தேமாதர கோஷம் செய்து ஸ்ரீமான் டாக்டர் சுப்பிரமணியம் அவர்களைக்கொடியேற்றி வைக்கும்படி கேட்டுக்கொண்டார். டாக்டர் சுப்பிரமணியம் அவர்கள் வஸ்திராலயத்திற்கு முன் கொடியேற்றுமுகத்தான், இந்தத் தேசியக் கொடியைக்கொண்டு ஆரம்பிக்கப்பட்ட சாத்வீக சுதந்திரப் போராட்டம் கதர் அபிவிருத்தியை அடிப்படையாகக்கொண்டு ஆரம்பிக்கப்பட்டிருப்பதால் இப்போராட்டத்தில் வெற்றியடைய விரும்பும் யாவரும் கதரணிதல் மிக அவசியமென்றும், கதரின் அபிவிருத்தி கருதி இவ்வூரில் இதுபோன்ற காதி பந்தர்கள் ஏற்பட வேண்டுமென்று விரும்புவதாகவும் கூறினர்.

பின்னர் ஸ்ரீமதி திருநெல்லை ஆச்சி அவர்கள் வஸ்திராலயத்தைத் திறந்து வைத்தார்கள்.

ஸ்ரீ சு. கந்தசாமி பிள்ளையவர்கள், திறப்புவிழா அவசியம்பற்றிப் பேசியதும், வஸ்திராலய நிர்வாகியால் வந்தனேபசாரம் கூறப்பட்டு விழாவிற்கு விஜயம் செய்தவர்களுக்கு சந்தணம், வெத்திலைபாக்கு, கற்கண்டு முதலியவை வழங்கப்பட்டன.

## தேவாலயங்களுக்குக் கதர்

### தேவகோட்டை அருணசலம் செட்டியாரவர்கள் தர்மம்

தேவகோட்டை திருவாளர் ராம. அரு. அரு. ராம. அருணசலஞ் செட்டியாரவர்கள் 21-2-36உ மகாசிவாத்திரியன்று தஞ்சை ஜில்லாவிலுள்ள எல்லாத் தேவாலயங்களிலும் உபயோகிப்பான் வேண்டி சுமார் 500 ரூபாய் பெறுமான கதர் வஸ்திரங்களும் புடவைகளும் வழங்கினர்.

### அரியக்குடி ராமானுஜய்யங்கார். சிந்தாதிரிப்பேட்டையில் கார் விபத்து

சிந்தாதிரிப்பேட்டையில் பொன்னியம்மன் கோவில் பாலத்திற்கருகில் பிப்ரவரி 23உ இரண்டு மோட்டார்கள் மோதிக்கொண்டன. இரண்டு வண்டிகளுக்கும் சேதமேற்பட்டது. ஒருமோட்டாரில் வீற்றிருந்த சங்கீத வித்வான் அரியக்குடி ராமானுஜய்யங்காருக்கு முகத்திலும் கையிலும் காயமேற்பட்டதாகக் கூறப்படுகிறது. அவர் சிகிச்சைக்காக உடனே ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் செல்லப்பட்டதாகத் தெரிகிறது இதனல் அய்யங்கார் கோகலே ஹாலில் நடத்துவதாக இருந்த கச்சேரி இதனல் ரத்துச் செய்யப்பட வேண்டியதாயிற்றும்.

### பாரதி சங்கம் பாசியன்.

பாசியன் பாரதி சங்கத்தின் சார்பாக யுவ-ஆண்டு தைத்திங்கள் 24-ம் நாள் தைப்பூசத்தினத்தன்று நகரத்தார் மடத்து ஹாலில், இவண் இளைஞர்களால் வசிகர சுந்தரி, என்ற நாடகத்தை அற்புத சீன்களுடனும் அழகிய மின்சார தீபங்களுடனும் வெகு திறமையாக நடித்துக் காண்பிக்கப்பெற்றது. அவ்வமயம் உள்ளூரிலிருந்தும் அயலூரிலிருந்தும் சுமார் 1200 ஜனங்கள் வரை வந்திருந்தது குறிப்பிடத் தக்கது.

பாசியன் பாரதி சங்கத்தின் முதலாவது ஆண்டு இரண்டாவது மாதக் கூட்டம் நாளிது தைத்திங்கள் 30-ம் நாள் மாலை 4-30 மணிக்கு திரு. கரு. நாகப்ப செட்டியாரவர்கள் தலைமையில் மாணவர்கள் கடவுள் வாழ்த்துக்கூற இனிது ஆரம்பமாயிற்று. அது காலை திரு. சித. சுப்பிரமணிய சுவாமிகளும், திரு. சி. ராம. ப. ராம. பழனியப்ப செட்டியாரவர்களும் சொற்பொழிவு நிகழ்த்தினர்கள். பின்னர் தலைவரவர்கள் முடிவுரை கூறியதும் காரியதரிசி அவர்களால் வந்தனம் கூறப்பெற்று சந்தன தாம்பூலம் வழங்கியதும் 6-மணிக்கு கூட்டம் இனிது நிறைவேறியது என்று காரியதரிசி அறிவிக்கிறார்.



கிள்ளானில் பிப்ரவரி 6-ந்தேதி காலமான திருவாளர் மு. ராம. இராமன் செட்டியாரவர்கள்.

## கப்பல் செய்திகள்

### நாகபட்டினத்திற்கும் பினங்குக்கும் (ஏஜண்டினிடமிருந்து) புறப்படுதல்

கப்பல்கள் நாகப்பட்டணத்திலிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும் விபரம் வருமாறு:—

| | |
|---|---|
| ரஜுலா | 29—2—36 |
| ரோணு | 14—3—36 |

### வருதல்

கப்பல்கள், மலாய் நாட்டிலிருந்து நாகப்பட்டணத்துக்கு வரும் தேதி வருமாறு:—

| | |
|---|---|
| ரோணு | 5—3—36 |
| ரஜுலா | 19—3—36 |

### கொழும்புக்கும் மலாய் நாட்டுக்கும் (நமது கொழும்பு நிருபர்)

P. & O. இங்கிலீஷ் மெயில்

கொழும்பிலிருந்து பினங்குக்கு:—

| | |
|---|---|
| நால்டேரா | 7—3—36 |
| கார்தேஜ் | 22—3—63 |

N. Y. K. ஜப்பான் மெயில்

கொழும்பிலிருந்து சிங்கப்பூருக்கு:—

| | |
|---|---|
| டெருகுனிமாரு | 29—2—36 |
| ஹாருசன்மாரு | 16—3—36 |
| ஹருணமாரு | 30—3—36 |

பினங்கிலிருந்து கொழும்புக்கு:—

| | |
|---|---|
| ஹாகோனிமாரு | 6—3—36 |
| சூவாமாரு | 21—3—36 |

### கண்டவராயன்பட்டி

ஜவஹர்லால் பியாட்மிண்டன் கிளப்

யுவஹு மாசிமீ 5உ (21-2-36) திங்கட்கிழமை மாலை 4-30 மணிக்கு பழ. கரு. பொது வீட்டிலிருந்து பல அன்பர்கள் சூழ மேள வாத்தியங்களுடன் ஊர்வலமாக பழ. கரு. பொதுவில் அழகாக அமைக்கப்பெற்றிருக்கும் கல்லுக்கட்டி ஊரணிக்கரையில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும் இடத்தில் மேற்படி கிளப்பை திருவாளர் வி. சி. பழநியப்ப செட்டியாரவர்களால் திறந்து வைக்கப்பெற்றது. சில அன்பர்கள் என்றும் சிறப்புடன் நடைபெறவேண்டுமாய் ஆசீர்வதித்தார்கள். ஷெ கிளப்புக்கு வி. கரு. க. காசிவிஸ்வநாதன் செட்டியாரவர்களைக் காரியதரிசியாக ஏற்பாடு செய்திருக்கிறார்கள் என ஒரு நிருபர் அறிவிக்கிறார்.

பிரபல பத்திராசிரியர் வில்லியம் ரூடால்ப் ஹெர்ஸ்ட் என்பவருக்கு வருஷத்திற்கு ஒரு லட்சம் பவுன் சம்பளமாம்.

## நோட்டீஸ்

தேவகோட்டை

டி. மு. கோர்ட்டு

S. C. No. 457 of 35.

| | |
|---|---|
| அளகப்புடையார் | — வாதி. |
| வெள்ளயம்மாள் | — பிரதிவாதி. |

ஷெ பிரதிவாதிக்கு நோட்டீஸ்:—

தாங்கள் வாதிக்கு எழுதிக்கொடுத்திருக்கும் பிருமிசரி நோட்டுப்படிக்குள்ள அசல் வட்டி ரூ. 40—12—4-ஐ வரப்பற்ற தங்கள் பேரில் பிறுது செய்து 29—2—36உ வாயிதா ஏற்பட்டிருக்கிறது. தங்கள் ஆக்ஷேபனையை ஷெ வாயிதாவன்று தெரிவித்துக்கொள்ளவும்.

P. கணேச அய்யர்,
அட்வகேட்,
தேவகோட்டை,
25—2—36.

(9-ம் பக்கத் தொடர்ச்சி)

இனி வட்டித் தொழிலையே நம்பி நிற்கமுடியாது. இந்தியன் பாங்கியை பாருங்கள். எத்தனை பிராஞ்சுகள் உள்ளன. அதில் நம்மவருக்கே பங்கு ஜாஸ்தி. என் அதிலுள்ள உத்தியோகம் முழுமையும் நாம் பார்க்கக்கூடாதென்று கேட்கிறேன். செட்டிநாடு மெர்க்கண்டைல் பாங்கி ஆரம்பிக்கும்போது சாதாரணமாகத்தானிருந்தது. இப்போது பல பிராஞ்சுகள் தோற்றுவிக்கப்படுகின்றன. சென்னையில் ஒரு கிளை ஸ்தாபித்தார்கள். ரங்கூனுக்கும் வரப்போகிறது. பாங்கித்தொழில் அனுபவம் பெறுவது செட்டியார்கட்கு மிகவும் சுலபமாகும்.

பின்னர் திரு. பிச்சப்பா சுப்பிரமணியன் பேசியது வருமாறு:—

அன்புள்ள சகோதரர்களே! எதிர்பாராது எங்கள் பர்மாப் பிரயாணம் அமைந்தது. நீங்கள் அனைவரும் கௌரவமாக—மரியாதைகாட்டி வரவேற்றீர்கள். என் உடல் நலமின்மை காரணமாக சுமார் 5 வருடங்களாக நான் பொதுஜன சேவையிலிருந்து ஒதுங்கிநிற்கின்றேன். எனினும் என்னை வரவேற்று உபசரித்தது, உங்களுக்குள்ள ஜாதீய அபிமானமே காரணமாகும். இது கண்டு மெத்த சந்தோஷித்து உங்களுக்கு நன்றி செலுத்துகின்றேன். ஒன்பது ஆண்டுகளுக்கு முன்னே இந்த ரெங்கூனில் நடந்த இளைஞர் மகாநாட்டிற்குத் தலைமை வகிக்க நான் வந்தபோதிருந்த நிலைமையையும் தற்போதுள்ள நிலைமையையும் நோக்கினால் எவ்வளவோ நம்மவர்கள் முன்னேற்ற மடைந்திருக்கிறார்களென்றே சொல்லவேண்டும். பெண்களை உடனழைத்து வருதல் என்ற பிரச்னை அப்போது ஒரு சிலருக்குப் பிடிக்காதிருந்தது. தற்போது அது சர்வ சாதாரணமாகிவிட்டதோடு—கலப்புமணம்—விதவா விவாகம் முதலிய சீர்திருத்தங்களை எளிதாக இங்குள்ளார் ஆதரிப்பதை நான் அறிவேன். இளைஞர் தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில் மிகச் சிறிதாக இருந்த பள்ளிக்கூடம் இன்று கம்பையில் வளர்ந்தோங்கி சிறந்த முறையில் நடைபெறுவது எவ்வளவோ மகிழத்தக்கதொன்று. இன்னும் முன்னேறிக்கொண்டேயிருக்கவேண்டும். இளைஞர்களை நீங்கள் உற்சாகப்படுத்தவேண்டும். உங்களின் உற்சாகமான உரைகள் உதவி அளிக்கும்.

# இரங்கோனில் குமரன் ஆசிரியர்

எதிலும் பயம் வேண்டியதில்லை. நம்மவர்கள் பல விஷயங்களில் அச்சம் கொள்கின்றனர். இது பழக்கமாகிவிட்டது. "இதெல்லாம் நமக்கென்னத்திற்கு" என்ற எண்ணமே முன்னேற்றத்திற்குத் தடையாக இருக்கிறது. பயம் தொலைய வேண்டுமானால் உடலிலே பலம் நன்றாகவேண்டும். உடல் பலமிருந்தால் நம்மை அனைவரும் விரும்பி வரவேற்பார்கள். அப்லாரிடம் ஒற்றுமை தானே வளரும். மனோ பலமும் உண்டாகும். மனோ சக்தியும் உடல்பலமும் இருந்தால் எதைத்தான் சாதிக்கமுடியாது. நாம் நல்லவர்கள். பிறர் எளனமாக நடந்தாலும் அதனைப் பொருட்படுத்தாமல் போனால் போகிறதென்று எண்ணிவிடுகிறோம். மனிதன் தன்மதிப்புடன் வாழவேண்டும். மானத்துடனேயே வாழவேண்டும். பிறர் அவமதிப்பை ஞானிகள்போல் அவ்வளவு பொறுமையாக எற்றுக்கொண்டால் அது சிறந்த சாத்வீக முறையேயாகும். கையால் ஆகாமல் மனஎரிவுடன் பொறுமை என அதற்குப் பேர் வைத்துக்கொண்டால் அது சரியல்ல. ஆண்மையுடன் நடக்கவேண்டும். அஞ்சா மனப்பான்மை வேண்டும். நம்மவர்கள் உடை விஷயத்தில் பெரும் கவனம் செலுத்தவேண்டுமென்று சொல்லவிரும்புகிறேன். எனில் உடை சிறந்ததேயாகும். ஆனால் வியாபார ஸ்தலத்தில் சம அந்தஸ்தான உடையே தரிக்கவேண்டும். முன்னைக்கு இப்போது நம்மவர்கள் சற்று நன்றாக ஆடை அணிகிறார்களென்றாலும் இது போதாது. தோற்றம் இன்னும் உயர்ந்ததாக இருக்கவேண்டும். நம் ஜாதீய கௌரவத்தைக் காப்பாற்றுவதற்கும் இது முக்கியமென்பதை உங்கட்குச் சொல்லுகிறேன். உத்தியோக தோரணையில் 'புல்சூட்' நல்லதென்று தோன்றுகிறது. இது உங்கள் இஷ்டத்தைப் பொறுத்த விஷயம். முன்னேற்றமான விஷயங்களைக் கவனிக்கும் இச்சங்கத்தார் இந்த உடைவிஷயம் சிறிதென்று எண்ணிவிடாது யோஜித்துநம்மவர்கட்கு சிறந்த ஒருமுறையை ஆக்கிக்கொள்ளவேண்டிக்கொள்கிறேன். கதர்உடுத்துவது நம்தேசத்திற்கு நன்மை. நம்நாட்டுத் துணி. மேலும் சுயமதிப்புள்ளவர் என்பதை கதர் காண்பிக்கின்றது. மற்றும் கதர் உடுத்துவது தேசிய புரட்சியில் சேர்ந்ததாகமாட்டாது. சிக்கனமும் அழகும் சேர்ந்திருக்கிறது. நம்மிடத்தே மறைந்து கிடக்கும் சக்தியை நாம் உணரவேண்டும். நன்மை செய்பவர்களைப் பாராட்டவேண்டும். ஜாதீய விஷயங்களில் நீங்கள் மேன்மேலும் சிரத்தையும் அன்பும் காட்டவேண்டுமென்று கேட்டுக்கொண்டு உங்கள் அன்பிற்குத் திரும்ப ஒருமுறை வந்தனம் செலுத்தி உங்களிடம் விடைபெற்றுக்கொள்கிறேன்.

தலைவர் முடிவுரையாகப் பேசியது பின் வருமாறு:—

பெரியோர்களே!

சகோதரி, சகோதரர்களே!

திருவாளர்களான சொ. முருகப்ப செட்டியாரவர்களும், திரு. பிச்சப்பா சுப்பிரமணியன் செட்டியாரவர்களும் சர்க்கரைப் பந்தலிலே தேன்மாரி பெய்ததுபோல செய்த பிரசங்கத்தை நாம் அனைவரும் கேட்டு ஆனந்தித்தோம். செலவுகளைக் குறைத்து வாழ்க்கையை இன்பமாக்குவது நமது கடமையாகும். நமது தொழின் முறையிலும், பெண்களது கல்வி அபிவிருத்தியிலும், கைத்தொழில் கல்வியை நமது சிறுவர்கட்குப் போதிப்பதிலும், சங்கத்தை வளர்க்கும் முறையிலும், திருவாளர் சொ. முருகப்பா அவர்கள் சொல்லிய சீர்திருத்தங்களை நாம் நடைமுறையில் கொண்டு வருவது அவசியமாகும். திருவாளர் பிச்சப்பா சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் கூறிய புத்திமதிகளை நம்மவர்கள் கைக்கொண்டு உடல்வலியும் அஞ்சாமையும், நல் விஷயங்களில் ஊக்கமும் அதிகரிக்கச் செய்யவேண்டும். திரு. பிச்சப்பா பத்து ஆண்டுகட்கு முன் இந்நாட்டிற்கு வந்து நம்மை ஊக்குவித்து பொதுக் காரியங்களில் இறங்குமாறு தூண்டியது என்றும் மறக்க முடியாது.

இவ்விரு பெரியார்களும் நமது வேண்டுகோட்கிணங்கி இங்கு விஜயஞ் செய்து சொற்பொழிவாற்றியமைக்கு நாம் மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம். இவர்கள் நீடூழி வாழ்ந்து நமது குலமுயரவும், சீர்திருத்தம் பெருகவும் இன்னும் பல தொண்டுகள்புரிய இறைவனது அருளைப் பிரார்த்திக்கின்றேன்.

காரியதரிசி திரு. சுப. க. அ. லட்சுமணன் செட்டியாரவர்கள் வந்தனம் கூற கூட்டம் நிறைவெய்தியது.



## ஜாதகம்







# அவன் ஒரு கோழை!

"வில்லி"

பத்து வருடங்களுக்கு முன் எங்கள் ஊரில் 'ஹார்ம்ஸ்டன்' சர்க்கஸ் நடந்து நாலைந்து நாட்கள் ஆய்விட்டன. அதிலே காட்டப்பெற்ற வேடிக்கைகளிலெல்லாம், ஒரு மனிதன் குதிரை மீது நின்று பல்டிகள் அடித்ததுதான் என்னைப் பெரிதும் கவர்ந்துவிட்டது.

நானும் எப்படியாவது குதிரைச்சவாரி செய்துவிடவேண்டுமென்று 'கங்கணங்கட்டிக்கொண்டேன். ஆனால் குதிரைக்கு எங்கே போவது? நீளமாக யோசித்தேன். ஒரு வழியும் தோன்றவில்லை.

வீராகவன், எனது பள்ளித்தோழன். அவன் 'ஷாப்புக்கடை' முதலாளி மகன். தினம் நிறையக் கல்கண்டு, பேரீச்சம்பழம் முதலியன கொண்டுவருவான். இதற்காகத்தான் அவனோடு சிநேகமாயிருந்தேனென்று சில பொறாமைக்காரர்கள் சொல்வதுண்டு.

'நானும், நண்பர் வீராகவனும் ஒருநாள் கோவிலுக்குச் சென்றோம். சுவாமி தெரிசனைக்கென்று எண்ணிவிடாதீர்கள். குதிரைச்சவாரிக்குத்தான் போனோம். தமிழ்நாட்டுக் கோவில்களிலே கட்டாயம் குதிரைவாகனம் உண்டல்லவா? நிஜக்குதிரையில் சவாரி செய்ய நானென்ன ராஜாவா? மரக்குதிரையிலாவது சவாரி செய்யலாமென்ற உத்தேசந்தான்.

ஆட்கள் ஓய்ந்திருக்குஞ் சமயங்களில், கோயில் மரக்குதிரை மீது சவாரி செய்து வந்தோம். அது அத்தனை சுவாரஸ்மாகயில்லை. அதோடு ஒருநாள் கோயில் உத்தரமணியம் கண்டுவிட்டார். அப்பொழுது வீராகவன், குதிரையின்மேல் உட்கார்ந்து கொண்டு அதை ராட்டினம்போல் சுழற்றிக்கொண்டிருந்தான். உத்திரமணியம் வீராகவனின் காதைப் பிடித்துக்கொண்டு என்னவோ செய்தார்! அவ்வளவு தான். அதன்பிறகு எனக்கொன்றுந் தெரியாது. ஒரே ஓட்டம்!

பிறகு, அவன் தாயார் கடையில் கரியபவளம் வாங்கிவந்ததாய்க் கேள்வி.

2

எனக்குமட்டும் என்னவோ குதிரைச் சவாரி ஆசை ஒரேயடியாக நெஞ்சைப் பற்றிக்கொண்டிருந்தது. அந்த ஆசையோடு ஒருநாள் மாலை, எங்களூர் (ஞானியார்மலை) உச்சியிலுள்ள புளியமரத்திலேறி உட்கார்ந்து ஊஞ்சல் ஆடிக்கொண்டிருந்தேன். வீராகவனும் மரத்தினடியில் உட்கார்ந்து கொண்டிருந்தான். சாதாரணமாக அவன் மரத்தில் ஏறவேமாட்டான். அதிலும் சுமார் 600 அடி உயரமுள்ள மலையின் மீதிருக்கும் மரத்திலேறி ஊஞ்சல் ஆடுவதா? அதைவிட உயிரைவிட்டு விடலாமே என்பான் கோழை ராகவன்!

('அவன் ஒரு கோழை' என்ற தலையங்கத்தின் அர்த்தம் இப்பொழுது உங்களுக்கு விளங்கி இருக்கும்? உண்மைதானென்கிறீர்களோ!)

மரக்கிளையிலுட்கார்ந்து மேலுங் கீழுமாய் ஆடிக்கொண்டே கீழே பார்த்தேன், மலையின் மற்றோர்பக்கத்தில் சில கர்த்தபங்கள் மேய்ந்து கொண்டிருந்தன. இதைப் பார்த்ததுமே எனக்கு ஒரு யோஜனை தோன்றிற்று. நெடுநாளாக என்மனத்தை அழுத்திக்கொண்டிருந்த குறையைப் பூர்த்தி செய்து கொள்வதென்று துணிந்தேன். குதிரையின் சித்தப்பாபிள்ளை தானே கழுதை!

"வீராகவா! எழுந்துவா விரைவாக," என்று கூறிக்கொண்டே கீழே இறங்கினேன். சந்தடி செய்யாமல் ஓடி ஒரு கர்த்தபத்தை வளைத்துக்கொண்டேன். பக்கத்திலே கிடந்த சில ஊணன் கொடிகளை அறுத்து ஜேணங்கள் தயாரித்தேன், ஜோடித்தேன் கர்த்தபத்தை. மறுவினாடி அதன் மீது ஆரோகணித்து 'ரேஸ்' விட ஆரம்பித்தேன். என்ன போங்கள். அப்பொழுது நீங்கள் பார்த்திருக்க வேண்டும்! கொடுத்து வைக்க வில்லை. என்ன செய்யலாம்?

சுமார் அரை மணி நேரம் அந்த மலைகளையெல்லாம் ஒரு பிரதக்ஷணம் செய்தேன். வீராகவனும் என்னைப் பின் தொடர்ந்து ஓடிக்கொண்டிருந்தான். அவனுக்கு நாக்கில் ஜலம் ஊறிவிட்டதோ என்னவோ? 'வில்லி நான்மட்டும்…………..' என்று தொணதொணத்துக் கொண்டே இருந்தான். எனக்கும் சற்று ஓய்வெடுத்துக் கொள்ளவேண்டும் போலிருந்தது. 'குதிரை'யை நிறுத்திக் கொண்டு,

"சரி ஏறு" என்றேன்.

"விழுந்துவிட்டால்" என்றான்.

"மண்டை உடையும்" என்றேன்.

"என்னவோ பத்திரமாய்ப் பிடித்துக் கொள்" என்றான் கவலையோடு.

"ஆகட்டும்" என்று கூறிக்கொண்டே வீராகவனை கர்த்தபத்தில் ஏற்றிவிட்டு "நடத்து" என்றேன்.

"ஏது ஊணன் கொடிலகான் கைக்குலைக்காது போலிருக்கிறதே? கையில் சுற்றிக் கட்டிக்கொண்டால் தேவலை" என்றான். இரண்டு கைகளிலும் இரண்டு பக்கத்துக் கொடிகளையும் தனித்தனியே கட்டிவிட்டேன்.

அதோடு நிறுத்திக்கொண்டிருக்கலாம், விதி வலிது! யாரைவிட்டது!

அன்றைக்கு முதல் நாள்தான் தீபாவளி. ஏராளமான சீனு வெடிகள் எங்கள் வசம் ஸ்டாக் இருந்தது. அப்பொழுது பயங்கரப் புரட்சி இயக்கங்கள் ஒன்றும் கிடையாது. எவ்வளவு வெடிவேண்டுமானாலும் வைத்துக்கொள்ளலாம்.

மடியிலிருந்து ஒரு கட்டு வெடியை எடுத்து வீராகவன் ஏறியிருந்த கழுதையின் வாலில் கட்டினேன். ஒரே ஒரு நெருப்புக்குச்சியை—உண்மையாக ஒன்றுதான்—கிழித்து அதில் வைத்தேன்.

சடபட, சட்பட் என்ற சத்தங்கள் கிளம்பின. அவ்வளவுதான் எடுத்ததய்யா ஓட்டம் நாற்கால் பாச்சலிலே! மலைக்குன்றுகளிலிருந்து ஒவ்வொரு தாண்டல், ஒரே ஓட்டம் கற்களெல்லாம் சிதறுகின்றன. பாவம், வீராகவன் என்ன செய்வான்? பாழும்கழுதை இப்படித்தான் பண்ணுமா? ஒரேயடியாக, வண்ணார் வீட்டை நோக்கியே ஓட ஆரம்பித்தது

மறுநிமிடம், என் ஆருயிர் நண்பன் பாறையில் வீழ்ந்தான். 'ஆபத்துக்குதவிய நண்பன்' என்ற பேரெடுத்து விட்டோம் என்று தள்ளிக் குதித்துக்கொண்டு ஓடினேன்; தூக்குவதற்கு முடியவில்லை, அவன் கையில் வகான் கட்டப்பட்டிருந்தபடியால் கற்பாறையில் போட்டு இழுத்துக்கொண்டே ஓடிற்று. இடையிடையேபின்கால்களைக்கொண்டு லாகவமாய்ச் சிலம்பம் வேறு விளையாடுகிறது!

என்னுடைய முழுசக்தியையும் உபயோகித்து ஓடியும் அதைப்பிடிக்க முடியவில்லை. இங்கிலேயில் வீடுகளும் நெருங்கிவிட்டன. இனி நாமொன்றுஞ் செய்ய முடியாது. ஏதோ விதிப்படி நடக்கட்டும் என்று எண்ணிக்கொண்டு கேசரிமார்க்கமாகப் புறப்பட்டு வீடுசேர்ந்தேன்.

3

அந்தக் கெதிகெட்ட கழுதை, வீராகவனை இடையில் எங்கேயும் தப்பித்தவறி விட்டுவிடாமல், இழுத்துக்கொண்டேவந்து வண்ணார் வீட்டில்தான் நின்றதாம். (மறுநாள் இந்த விஷயம் என் காதுக்கெட்டிற்று.) வண்ணான் கதிகலங்கிப் போனானும். பையனுக்கு வாயிலும் மூக்கிலும் இரத்தம் ஒழுகிற்றாம். சட்டென்று கைக்கட்டை அவிழ்த்து, எடுத்துக்கொண்டிருந்தானும். அதற்குள் அங்கே கூடியிருந்த ஜனங்கள் போய் வீராகவன் தகப்பனருக்குச்சொல்ல, அவர் ஓடோடியும் சென்று, தன் ஒரே மகனை வீராகவனை எடுத்துக்கொண்டு ஆஸ்பத்திரிக்குப் போனாராம். அப்பால் மூன்று மாதம் சென்றே வீட்டுக்கு வந்ததாக கேள்வி.

அப்போது ஊரைவிட்டுப் புறப்பட்டவன் இன்னும் ஊர் திரும்பவில்லை. உங்களில் யாராவது வீராகவனின் க்ஷேமத்தை அறிவித்தால் மிகவும் நன்றியுள்ளவனாயிருப்பேன். முடியுமா?

(குறிப்பு:—ஏதோ சைனியம் இந்தியமயமாகப் போகிறதாமே? அப்படியானால் வீராகவனுக்குக் கர்னல் உத்தியோகம் கிடைக்குமா? கர்னலுக்கு குதிரை உண்டல்லவா?—வில்லி)

### தீண்டாதாருக்கு மந்திர உபதேசம்

மாளவியா முயற்சி

அகில இந்திய சநாதன மகாநாட்டின் தீர்மானத்தைப் பின்பற்றி பண்டித மாளவியா மஹாசிவராத்திரி யன்று காசியில் இந்துக்களுக்கு குரு மந்திரம் உபதேசித்தார்.

# அகில தேசிய ஐக்கிய சங்க கூட்டம்

(நமது நிருபர்)

தேவ 17-2-36.

அகில தேசிய ஐக்கிய சங்கத்தின் மாதாந்திரக் கூட்டமொன்று 16-2-36உ மாலை தேவகோட்டை அட்வகேட் ஸ்ரீமான் A. ரெங்கசாமி அய்யங்காரவர்கள் பங்களாவில் நடைபெற்றது. சங்க அங்கத்தினர்களுக்குத்தேனீர் விருந்தளிக்கப்பட்டதும் ஸ்ரீமான் A. ரெங்கசாமி அய்யங்காரவர்கள் இந்தியாவில் தாழ்த்தப்பட்டவர்கள் மதமாற்றப்படுதல் சம்பந்தமாக ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினர்கள். இதுவிஷயம்பற்றி ஒரு விவாதமேற்பட்டது. திரு. சிவசுப்பிரமணியஅய்யர், டாக்டர் ஷெட்டி ஆகியவர்கள், கிருஸ்தவப் பாதிரிகள் தங்கள் மதத்தினரின் சங்கியையைப் பெருக்கி ராஜீயத்துறையில் தங்கள் மதத்தினருக்கு அதிகப் பிரதிநிதித்துவம் பெறுவதற்காகச் செய்துவரும் மதம் மாற்றுதல் பிரசாரம் கண்டிக்கத்தக்க தென்று பேசினர்கள். திரு. ஈப்பன் முன் பேசியவர்களின் அபிப்பிராயத்தைத் தாம் ஒப்புக்கொள்ள வில்லையென்றும் இது போன்ற வாதங்களில் ஈடுபடுவது பயனற்ற தென்றும், இன்றைய நிலைமையில் மக்களுக்கு அதிகத்துன்பங்கள் ஏற்படுவதற்கு அடிப்படையான காரணம் இன்று அனுஷ்டித்து வரப்படும் மதாசாரங்களென்றும், இந்த அழுக்காறுகளைப் போக்குவதற்கு பயனற்ற வாதங்களில் ஈடுபடாமல், பொருளாதாரம், மதம் ஆகியவைகளில் ஹரிஜனங்களைப் பாதிக்கக் கூடிய விஷயங்களைப்பற்றி யோசித்து அவைகளை நிவர்த்திக்க வழி தேட வேண்டுமென்றும் பேசினர்கள். திரு. கைத்தான் அவர்கள் முடிவில், ஒருவருடைய மதானுபவம் மற்றவர்களுடைய மதானுசாரங்களுடன் கலப்பதினால் விருத்தியடைகின்றதென்றும், படித்தவர்கள் யாவரும் குக்கிராமங்களிலுள்ள ஹரிஜனங்களுடன் பட மூடமக்களுடன் பழகி அவர்களை மேன்மையடையச் செய்ய வேண்டுமென்றும் பேசினர்கள்.

சென்ற மாதக் கூட்ட நிகழ்ச்சிகள், ஐக்கிய சங்கத்தின் சார்பிலுள்ள கிராமப் புனருத்தாரணத் திட்டக்கமிட்டியின் நிகழ்ச்சிகள் கைத்தான் அவர்களால் வாசிக்கப்பெற்றதும் அடுத்த கூட்டம் மார்ச்சுமீ 15உ காரைக்குடியில் நடத்துவ தெனத் தீர்மானிக்கப்பட்டது.

# இயந்திர உலகின் அதிசய இயக்கம்

## வியாபாரம் செய்யும் விநோத இயந்திரம்

## கணக்குப் பார்க்கும் கணித இயந்திரம்

நவீன காலத்தை இயந்திரயுகம் என்றே கூறலாம். அதிலும் 20-ஆம் நூற்றூண்டுக்கு அப்பெயர் முற்றிலும் பொருந்தும்.

இந்த நூற்றூண்டின் விசேஷப் பெருமை என்ன வென்றால், சென்ற சில வருஷங்களுக்குள் மேனுடுகளில் 'தாமாக இயங்கும் இயந்திரங்கள்' அதிவேகமாகப் பெருகி வருகின்றன. அந்த இயந்திரங்கள் கடைகளில் வியாபாரம் செய்கின்றன, ரயில்வே ஸ்டேஷன்களில், பிரயாணிகளுக்கு, குறிப்பிட்ட லைனில் என்ன ரயில் ஓடிக்கொண்டிருக்கிறது? அது எப்பொழுது இன்ன ஸ்டேஷனுக்கு வந்து சேரும், ஒரு குறிப்பிட்ட ஊருக்கு ரயில் கட்டணம் என்ன? அவ்வூருக்கு எந்தப் பாதைவழியாகச் செல்ல வேண்டும் என்பன போன்ற பல விஷயங்களைக் கேட்போருக்கெல்லாம் சோம்பாமல் இயந்திரங்கள் சொல்லிக் கொண்டிருக்கின்றன. இவைகளில் பிரசித்தமாயிருக்கும் சில முக்கியமான 'தாமாக இயங்கும் இயந்திரங்களைப் பற்றிச் சில விவரங்களைக் குறிப்பிடுகிறேன்.

### சாகலேட் விற்கும் இயந்திரம்

ஐரோப்பாவிலுள்ள பெரிய நகரங்களில், இத்தகைய இயந்திரங்கள் சாதாரணமாக, சாக்லெட்டுகள், சிகரெட்டுக்கள் முதலியன வியாபாரம் செய்வது சர்வ சாதாரணமாய் விட்டது! கடைகளில் சாமான்கள் பரப்பப் பட்டிருக்கும் ஒவ்வொரு குவியலின் முன்னும், காசுகள் போடுவதற்கு உண்டியல் பெட்டிகளில் காணப்படுவது போன்ற துவாரங்கள் காணப்படும். அந்தத் துவாரங்களில் ஒரு பென்னி, 6 பென்ஸ், ஒரு ஷில்லிங் போன்ற குறிப்பிட்ட நாணயங்களைப் போட்டால், விரும்பிய சாமான் நமக்கெதிரில், மேசையைத் திறந்து கொண்டு வந்து நிற்கும். நாம் போட்ட நாணயம் உள்ளே இயந்திரத்தை இயக்கும் விசையில் (ஸ்பிரிங்) போய் விழுகிறது. உடனே அந்த விசை, சாமான்களை ஒவ்வொன்றாக வெளியே கொண்டுவந்து தரும்தட்டை வெளியே தள்ளுகிறது. நாம் சாமானை எடுத்துக் கொண்டதும், தட்டு தானாகவே பின் சென்று யதாஸ்தானத்தில் அமர்ந்து கொள்கின்றது. உடனே அத்தட்டில் புதிதாக அந்தச் சாமான் பொட்டணம் ஒன்று வந்து விழுகிறது. மறுபடி நாணயம் துவாரத்தில் விழுந்ததும், முன்போலவே வியாபாரம் நடைபெறுகிறது.

### சாமான்கள் ஆகிவிட்டால்

சாமான் அவ்வளவும் காலியான பிறகு ஒருவர் நாணயத்தைத் துவாரத்தில் போட்டால், அவருக்குச் சாமான் கிடைப்பதெப்படி என்ற சந்தேகம் உண்டாகிறதல்லவா? இந்த இயந்திரத்தின் ஆரம்பக் காலத்தில் இவ்விதம் போடப்பட்ட பணம் அப்படியே போய்விடும்; திரும்பக் கிடைக்காது. ஆனால், சமீபத்தில் இந்த விபத்தைத் தவிர்க்க, ஒரு யுகதி கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. அதாவது, உள்ளேயுள்ள சாமான்களின் கடைசிப் பொட்டணம் வெளியே வரும்போது, "இனிச் சாமான் இல்லை, விற்றுப் போயிற்று" என்று எழுதிய ஒரு சீட்டையும் கொண்டு வருகிறது. அந்தச் சீட்டு, மேஜையின் மேல் இருக்குமாதலால், கடைக்கு வருபவர்கள் குறிப்பிட்ட சாமான் விற்றுப்போயிற்று என்பதைக் கண்டு, வேறு சாமான் வாங்குவார்கள், அல்லது அடுத்த கடைக்குச் செல்வார்கள்.

### மோசம் செய்ய முடியுமா?

உண்மையான ஷில்லிங் நாணயங்களுக்குப் பதில், அதே அளவும் நிறையுமுள்ள மட்ட உலோகத்தால் செய்யப்பட்ட நாணயத்தை உபயோகித்துக் கடையை ஏமாற்றி விடக்கூடாதா? கடைவாசலில் விற்பனைக்கு மனிதர் ஒருவருமில்லையே, என்று தோன்றுகிறதல்லவா? கொஞ்சநாட்களுக்கு முன்வரை சிலர் இவ்விதமே செய்து கடைக்காரனைப் பெருத்த நஷ்டத்திற்கு ஆளாக்கிக்கொண்டு வந்தனர். இப்பொழுது அவ்விதம் ஏமாந்துபோக முடியாதபடி இயந்திரத்தில் வேண்டிய அபிவிருத்திகள் செய்யப்பட்டுவிட்டன. உள்ளே விழுந்த நாணயங்களை இயந்திரம் தடவிப்பார்க்கிறது. ராஜா தலையிருக்கிறதா, விளிம்புகள் சரியாக வெட்டப்பட்டிருக்கின்றனவா, என்றெல்லாம் நன்றாய்ப் பரிசோதனை செய்கிறது! இதுவும் உங்களுக்கு ஆச்சரியத்தை விளைவிக்கலாம். ஆனால், இது கேவலம் உண்மையே. இந்தப் பரிசோதனையில் சரியாகக் காணப்படவில்லை யென்றால், உள்ளேபோடப்பட்ட நாணயம் "பிரயோஜனமில்லை" என்று குறிப்பிட்டிருக்கும் துவாரத்தின்வழியாக வந்து 'பொத்' என்று கீழே விழுந்து விடும்! நாட்பட்டுப் போனதால், தேய்ந்து மழுங்கிய நாணயங்களாயிருப்பினும், இவ்விதமே கீழே விழுந்துவிடும். ஆதலின் ஏமாற்ற முடியாத காரியம்.

இந்தியாவில் பல பெரிய ரயில்வே ஸ்டேஷன்களில் 'பிளாட்பாரம்' டிக்கட்டுகள் வாங்குவதற்கு இயந்திரங்கள் ஏற்பட்டிருக்கின்றனவல்லவா? அவற்றிலெல்லாம் மேலே விவரித்த முறையில்தான் வேலை நடைபெறுகின்றது.

### ஒளிகளால் இயங்கும் இயந்திரங்கள்

மேலே குறிப்பிட்ட இயந்திர வகைகளில் ஸ்பிரிங் மூலமாக வேலை நடைபெறுகின்றது. இதை ஸ்பிரிங் முறையென்று நாம் குறிப்பிடுவோம். வெகு சமீபத்தில் மேனுடுகளில் பல விடங்களில் இந்த ஸ்பிரிங் முறைக்குப் பதிலாக ஒளிக் கிரணங்கள் மூலமாக இயந்திரங்கள் வேலை செய்கின்றன. ஒரு திருஷ்டாந்தம் கூறுகிறேன். ஓட்டல்களில் வேலைக்காரர்கள் தட்டுநிறைய சாமான்களை வைத்துக்கொண்டு இரண்டு கைகளிலும் தட்டுக்களை ஏந்திச் செல்லவேண்டியிருக்கிறது. அப்பொழுது அறைக்கதவுகள் அவர்களைக் கண்டமாத்திரத்தில் தாமாகவே திறந்துகொண்டு, ஆள் வாசப்படி தாண்டியதும் தாமாகவே மூடிக்கொள்கின்றன. இங்கு ஒளிக் கிரணங்கள் உபயோகப்படுகின்றன. இக்கிரணங்கள் நமது கண்களுக்குப் புலப்படா. ஏனெனில், அவற்றின் அலையளவுகள் மிகக்குறைவானவை. ஆள் வாவினால் அலை தடைப்படவே கதவுகள் திறந்து கொள்கின்றன. இம்முறையை உபயோகப்படுத்தி, திருடர்கள் வீட்டில் நுழைவதை அறிவிக்கவும், குதிரைப் பந்தயங்களில் ஓடும் குதிரைகளை அறிவிக்கவும், போக்கு வரத்துக்களை ஒழுங்கு செய்யவும் இயந்திர வசதிகள் ஏற்பட்டிருக்கின்றன.

### நமது நிறையைக் கூறும் இயந்திரம்

இந்தியாவிலே பல விடங்களில் 'நிறுக்கும் இயந்திரங்கள்' இருக்கின்றன. இவற்றில் ஓர் அணு நாணயத்தைப் போட்டு விட்டுப் பீடத்தின் மேல் ஏறி நின்றால், நமது நிறையைக் கடிகாரம் தெரிவிக்கும். மேனுடுகளில் இவ்வித நிறுக்கும் இயந்திரங்களில் பலவகைகள் ஏற்பட்டிருக்கின்றன. அவற்றில், நமது நிறை அச்சடிக்கப்பட்ட டிக்கட் ஒன்று வெளியில் வந்து விழுகின்றது ஒன்று. இன்னம் சில இடங்களில், நாணயத்தைப் போட்டு விட்டுப் பீடத்தின் மேல் ஏறி நின்றதும், நமது நிறை உரக்க அறிவிக்கப்படுகிறது. பின்னால் கூறியது எப்படி நடைபெறுகிறது என்றால், இயந்திரத்திற்குள் பல நிறைகள் காணப்படும். 'பேசும் பிலிம்' ஒன்று இதனுள் வைக்கப்பட்டிருக்கிறது. நாணயத்தைப் போட்டு, ஏறி நின்ற நம் ஸ்பிரிங்கின் இயக்கத்தினால் அந்த பிலிமின் ஏற்ற பாகம் நமது நிறையைச் சத்தமிட்டுக் கூறுகிறது.

மேலே குறிப்பிட்ட முறையில், அவ்வப்போது மணி என்ன என்று உரக்கக் கூறும் கெடிகாரங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அவை "இப்பொழுது மணி நான்கடித்து முப்பது நிமிஷங்கள் ஆகின்றன" என்பது போல் கூவும். பாரிஸில் இக்கடிகாரங்கள் டெலிபோனுடன் இணைக்கப் பட்டிருக்கின்றன. ஆதலின், சரியான மணி தெரிய வேண்டுமானால், 'எக்ஸ்சேஞ்ச்' ஆபீஸைத் தேட வேண்டாம். இக்கடிகாரத்துடன் இணைத்தவுடன் அது தானாகவே டெலிபோன் மூலமாகச் சரியான மணியைத் தானே சொல்லும்.

### திருடர்களைப் பிடிக்கும் இயந்திரம்

கனவான்களுக்கோ, அல்லது வேறு பொது ஸ்தலங்களுக்கோ செல்ல நேரிடின் அவர்கள் தங்கள் உடுப்புக்களையும் தொப்பிகளையும் கழற்றி வைப்பதற்கு வெகு பந்தோபஸ்து வேண்டுமல்லவா? இவ்விதம் பந்தோபஸ்து செய்து கொடுப்பதற்கு இயந்திரங்கள் இருக்கின்றன. ஒரு நாணயத்தை இயந்திரத்தில் போட்டால், அது தானாகவே திறந்துகொண்டு சாவியைக் கொடுக்கிறது. இந்தச் சாவியை நாம் எடுத்துக் கொண்டு நமது உடுப்புக்களையோ, அல்லது தொப்பிகளையோ, அங்குள்ள கம்பிகளில் மாட்டி. மேலேயுள்ள ஓர் கைப்பிடியைப் பிடித்திழுத்தால், தொப்பி, அல்லது உடுப்பு, கெட்டியாக இயந்திரத்தால் கௌவிக்கொள்ளப் படுகின்றது. ஆதலின், திருடர்கள் களவாட முடியாது. சொந்தக்காரன் வந்து அந்தத் திறவுகோலை உபயோகித்தால்தான் இயந்திரம் தனது பிடியை விடும்.

மேனுடுகளில் ரயில்வே ஸ்டேஷன்களில் 'அங்குச் செல்வதெப்படி' என்று பெயரிட்ட இயந்திரம் காணப்படும். அந்த இயந்திரத்தில் 'ஆட்டமாடிக்' டெலிபோன்களிலுள்ள 'டயல்' மாதிரி ஒரு டயல் காணப்படும். அந்த டயலை உபயோகித்து ஏதாவது ஒரு ஸ்டேஷனைத் திருப்பினால்; அந்த ஸ்டேஷனுக்கு ரயில் கட்டணம் என்ன? எந்த வழியாகச் செல்லவேண்டும்; என்ற இரண்டும் உடனே இயந்திரத்தால் அறிவிக்கப்படும்.

ப்ரைடன் என்ற ஸ்டேஷனில் 'ரொபாட்' என்று கூறப்படும் 'பேசும் இயந்திரம்' வைக்கப்பட்டிருக்கிறது. பொதுவாக, தாமாகப் பேசும் இயந்திரங்கள் எல்லாவற்றையுமே 'ரொபாட்' என்றுதான் குறிப்பிடுகின்றனர், இந்த இயந்திரத்தின்முன் பலவிடங்களுக்குச் செல்லும் ரயில்களின் ஜாப்தா வெவ்வேறாகச் சீட்டுக்களில் எழுதி வரிசையாக ஒட்டப்பட்டிருக்கிறது. ஸ்டேஷன்களின் பெயரும் வரிசையாக ஒட்டப்பட்டிருக்கின்றது. ஒரு குறிப்பிட்ட ரயில் சென்ற பின், அந்த ரொபாட் இயந்திரம் வெளியே சென்ற ரயிலைப்பற்றி ஒரு பிரசங்கம் செய்கிறது. எந்த இடத்தைவிட்டு அந்த ரயில் புறப்பட்டது, எங்கு, எத்தனை மணிக்குச் செல்கிறது, இவை போன்ற விஷயங்களை மனப்பாடம் செய்து ஒப்பிப்பதுபோல் ஒவ்வொரு நாளும் கூறும்.

### புக்கீப்பிங் இயந்திரங்கள்.

சென்ற சில வருஷங்களுக்கிடையில், பல பெரிய வர்த்தக ஸ்தாபனங்களில் 'புக்கீப்பிங்' வேலைக்கு இயந்திரங்களை வைத்துக் கொண்டிருக்கின்றனர். ஒரே சமயத்தில் அவை பத்துப்பேர்கள் 'பேரேடு' முதலியவை எழுதுவதைத் தானே செய்து, வரவு—செலவுகளைக் கூட்டி, மிச்சம் கட்டி விடுகிறது. இது மிகவும் ஆச்சர்யமான வேலையல்லவா? இந்த இயந்திரத்தில், பவுன் ஷில்லிங், பென்ஸ் இம்மூன்றுக்கும் வெவ்வேறு சக்ரங்கள் இருக்கின்றன. பவுனுக்கு மட்டும் தேவைக்குத் தகுந்தாற்போல் நாலு அல்லது ஐந்து சக்கரங்கள் இருக்கும். இப்பொழுது 12 ஷில்லிங் என்று அடிக்க வேண்டுமென்று வைத்துக் கொள்வோம். டைப் ரைட்டிங் இயந்திரத்தில் எழுத்துக்களை அமுக்குவதற்கு 'கீ'கள் இருக்கின்றனவல்லவா? அதுபோல் இங்கும் பல 'கீ'கள் இருக்கின்றன. அவற்றிலிருந்து 12 ஷில்லிங் என்ற 'கீ'யை அமுக்கினால் ஷில்லிங் சக்கரம் 12 தடவை சுழன்று பிறகு 12 என்று ஷில்லிங் கலத்தில் எழுத்துவிழும். இதே விதமாக மற்ற இனங்களும் அச்சடிக்கப் படும். இவற்றில் ஒரு சக்காத்திற்கும் ஏற்ற விதத்தில் தொடர்பு ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. 12 தடவை பென்னி சக்ரங்கள் சுழன்றால், ஒருதடவை ஷில்லிங் சக்கரம் தானாகவே சுழன்றுவிடும். அதேபோல் 20 தடவை ஷில்லிங் சக்காம் சுழன்றால், ஒரு தடவை தானாகவே பவுன் சக்ரம் சுழன்று கொள்ளும். இவ்விதமே ஒன்று, பத்து நூறு முதலிய ஸ்தானங்களும் மாறிக்கொள்கின்றன, இப்படிச்சொல்லிவிடுவது என்னவோ எளிதுதான். ஆனால், அதை நேரில் பார்த்தால்தான், அவ்வேலையின் ஆச்சர்யம் நன்கு விளங்கும். அத்தகைய இயந்திரங்களைக் கற்பனை செய்தும், நடைமுறையில் கொண்டு வந்தும், 'நச்சு' வேலைகளைச் சுலபமாக்கிய விஞ்ஞானிகளின் அறிவுத்திறனும், முயற்சியும், வியக்கத்தக்கவையே. "கலைமகள்"







## ஹரிஜனங்களும் திருவிழாவும்.

ஹரிஜனங்கள் தினம் ஜாதி ஹிந்துக்கள் மாதிரி குளித்து, சுவாமியை வணங்க தக்க சந்தர்ப்பமும், போதிய வழியும் கிடையாது. பொருளாதாரக்கஷ்டத்தினால், அவர்கள் தினம் காலையிலிருந்து மாலை வரை உழைத்து இரவு வந்தவுடன் வீடு வந்து சேருகிறான். தன்னுடைய வேலையிலுள்ள கஷ்டத்தைத் தீர்க்க ஊருக்குவெளியிலே தனக்காக முழு உரிமையுடன் நடத்தப்படும், ஆனந்தபவனமாகிய கள்ளுக்கடைக்குப் போய் கள்ளைக்குடித்து, சர்க்காருக்கு வரி செலுத்துகிறான். ஜாதி ஹிந்துக்களும், அவர்களைக் கள்ளுக்குடி என்றே பணம்கொடுத்து அனுப்புகிறார்கள். இப்படி மாடு மாதிரி உழைக்கும் ஹரிஜனங்களுக்கு திருவிழாக்காலங்களில் கொஞ்சம் மனசந்தோஷம் உண்டாகிறது. அன்று தன்னுடைய வீட்டில் பத்திரமாக வைத்திருக்கும் வெள்ளை வேஷ்டிகளைக் கட்டிக்கொண்டு, வெளியில்வா தன்னுடைய தினசரி வேலைகளிலிருந்து ஓய்வுகிடைக்கிறது. ஹரிஜனங்கள் முக்கால் பங்குப்பேர் விவசாயத்திலேயே ஈடுபட்டு இருப்பதால், திருவிழாவின் போதுதான் அவர்களுக்கு ஓய்வு கிடைக்கும். பிறநாட்களில் அவனுடைய எஜமானனாகிய ஜாதி ஹிந்து, இரவு 8 மணி ஆனாலும் ஓய்வு கொடுக்கமாட்டான்;

### திருவிழா.

ஆகையால் திருவிழாக்காலங்களில், அவர்கள் குளித்துப் புத்தாடை அணிந்து, தங்கள் மனைவி, மக்களுடன் கோவில் வாசலுக்கு வருவதற்கும் ஜாதி ஹிந்துக்கடைகளில் பலகாரம் வாங்கிச் சாப்பிடவும், சந்தோஷமாய் இனிய பாட்டுக்களைக் கேட்கவும் தானும் பாடவும் ஒரு சந்தர்ப்பம் கிடைக்கிறது. இதைக்கூட சுயநலம்பிடித்த ஜாதி இந்துக்கள் கெடுக்கப்பார்க்கிறார்கள். ஹரிஜனங்கள் மேல்சட்டை போடக்கூடாதென்றும், சந்தோஷமான நாளில், சந்தோஷமாக இருக்க விரும்பும் ஜனங்களின் மேல் பாய்கிறான். இது எவ்வளவுகேவலம்! திருவிழாவில், ஹரிஜனங்களுடைய கொட்டும், குதியும் அதிகமாக இருக்கிறது. அவர்களுடைய மனைவிகள், பெண்கள் குதூகலமாகக் கும்மி அடித்தும், வெள்ளைமனதோடு ஆடும் ஆட்டங்களும் எவ்வளவு அழகாயிருக்கிறது! அதைச் சீர்பண்ணி இன்னும் அலங்காரமாக வைக்க ஏற்பாடு செய்யாமல் ஜாதி ஹிந்துக்கள் அவர்கள் மனதைப் புண்படும்படிசெய்வது மிகவும் கொடுமையாகும். ஆகையால், சந்தோஷப்படுவதைவிட்டு, தன் பொறுமையால் ஹரிஜனங்களை இழிவுபடுத்தும் மேல் ஜாதியார்களை நாம் என்ன செய்வது?

ஏ ஹரிஜனங்களே, உங்களை இழிவுபடுத்தும் இடத்திற்குப் போய்ச் சுவாமியைத் தொழுவதைவிட, நீங்கள் இருக்கும் பக்கத்திலேயே திருவிழாவை நன்றாகக் கொண்டாடி பெரியவர்களைக் கூட்டிவந்து பிரசங்கங்கள் செய்யச்சொல்லி மேன்மையானவழியைத்தேடுவீர்களாக.—"ஹரிஜன ஊழியன்"

## 465 விபசார வழக்குகள்

### ரத்துக்குரிய விநோத காரணம்

[பிரிட்டிஷ் விவாக ரத்துக் கோர்ட்டில், கிறிஸ்துமஸ் விடுமுறைக்குப் பின், முதல் நாளிலேயே 465 விவாகங்கள் ரத்து செய்யப்பட்டு விட்டன. அந்த வழக்குக்களில் சிலவற்றை லண்டன் 'நியூஸ் ஆப் தி வொர்ல்ட்' என்ற பத்திரிகையின் 26—1—36-ம் தேதி இதழிலிருந்து கீழே பிரசுரிக்கிறோம். இவ்வளவு விவாக ரத்துக்கள் ஒரே நாளில் இதற்கு முன் பிரிட்டனில் செய்யப்படவே இல்லை என்று அப்பத்திரிகை கூறுகிறது.]

#### வேலைக்காரனுடன் சோரம்.

பெர்ஸிவல் ரெட்னல் என்பவர், அவரது மனைவியை ரத்து செய்வதற்கு மனு போட்டார். காரணம், "என் மனைவி எனது கடையில் வேலை பார்த்துக்கொண்டிருந்த கிரீன் என்பவனை அழைத்துக்கொண்டு போய்விட்டாள். கெல்வின் ரோட் என்ற விடத்தில், என் மனைவியும் கிரீனும் தம்பதிகள் போல் வாழ்ந்து வந்தனர்."

#### வேறு பெண்ணுடன் சோரம்.

ஸ்ரீமதி ருத்சாண்டெல் என்ற பெண்மணி அவளது புருஷனை விவாகரத்து செய்துவிட வேண்டினாள். காரணம் 'என் புருஷன் மனுவில் சொல்லப்பட்டுள்ள ஒரு பெண்ணுடன் தகாத நட்பு வைத்திருந்தான். நான் பிறகு அவனைவிட்டுப் பிரிய வேண்டியதாயிற்று."

#### ஹோட்டலில் சோரம்.

ஸ்ரீமதி ஈயாரிஸ் அவளது புருஷனை விவாக ரத்துசெய்துவிடச் கோரினாள். காரணம், "என் புருஷன் மெய்டன் ஹெட் ஹோட்டலில் வேறுபெண்களுடன் சோரஞ் செய்தான். அவனது துர்நடத்தையைக் கண்டு சகிக்கமுடியாமல், நான் என் புருஷனை விட்டுப் பிரிய நேர்ந்தது."

#### விபசாரம்

சார்லஸ் ஹீத் என்பவன் அவனது மனைவி மீதும், அவளுடன் விபசாரஞ் செய்த ஹெச். ஜார்ஜ் (விவாகம் ஆனவன்) என்பவன்மீதும் வழக்குத் தொடுத்தான். காரணம், "ஹாரோல்டு ஜார்ஜ் என்பவன் எங்கள் வீட்டில் வந்து தங்கியிருந்தான். அவன் போனபொழுது என் மனைவியையும் அடித்துக்கொண்டு போய்விட்டான்."

#### இரட்டை விபசாரம்

ஸ்ரீமதி அன்னிகோராட் என்பவள் அவளுடைய புருஷன் ஹாரி எட்வர்ட் கோராட்டை விலக்குமாறு கேட்டாள். காரணம்:

"என் புருஷன், ஸ்ரீமதி மாட்லீன் யூஜீன் கைட் என்பவளுடன் வியபிசாரஞ் செய்தான். என் புருஷன் அவனது சோர நடத்தையை என்னிடம் ஒப்புக்கொண்டதால், நான் என் கணவனை மன்னித்துவிட்டேன். ஆயினும், அவன் மறுபடியும் அதே பெண்ணுடன் விபசாரஞ் செய்துகொண்டு, ஷாங்கலீன் என்ற இடத்தில் இருவரும் ஒன்றாக இருந்தார்கள்."

இந்த விவாகம் ரத்து செய்யப்பட்டதும், மேலே வியபிசாரஞ் செய்த ஸ்ரீமதி கைட்டின் புருஷன் மிஸ்டர் கைட் என்பவர், அவரது மனைவியான சோரம் போனவளை விவாக ரத்துச் செய்து, அவளுடன் விபசாரஞ் செய்த ஹாரி எட்வர்ட் கோராட் டின்மீது வழக்குத் தொடுத்தார்.

#### "சீக்கிரம் வீட்டுக்கு வந்தபொழுது"

ஆல்பர்ட் எட்வின் வார்னீஸ், அவனது மனைவியை விவாக ரத்துச் செய்தான். காரணம்:

"நானும், என் மனைவியும் ஜான் மார்ஷல் என்பவர் வீட்டில் குடியிருந்தோம். ஜான் மார்ஷலின் மனைவி இறந்துபோனாள். நான் ஒரு நாள் வேலை பார்த்துவிட்டு, எதிர்பாராத முறையில்சீக்கிரம்வீடு திரும்பி வந்தபொழுது, ஜான் மார்ஷலும் என் மனைவியும் ஒன்றாக இருந்தார்கள். இருவரும் சோரம் போனதாக என்னிடம் ஒப்புக்கொண்டுவிட்டார்கள். பின்னர்: என் மனைவியும் ஜான் மார்ஷலும் ஸ்னார் கேட் என்றவிடத்தில் தனித்துவசித்தனர்."

#### வெளியூரில் கெட்டநடத்தை

ஸ்ரீமதி மேரி ஜான்சன் அவளது புருஷன் பிராங்க் ஜான்சனை ரத்துசெய்யக்கோரினாள். காரணம் "என் கணவன் வியாபார விஷயமாய் வெளியூர் போயிருந்தபொழுது, மாண்ட்ரீலில் வியபிசாரஞ் செய்தான்."

#### மீன் பிடிக்கச் சென்றானா?

ஸ்ரீமதி ஜார்ஜினா அன்னாட், அவளது புருஷனை விலக்கிவிடுமாறு கேட்டாள். காரணம்:

"எங்களுக்கு விவாகமான சிறிது காலத்திற்கெல்லாம் என் புருஷன் மீன் பிடிக்கச் செல்வதாகக் கூறினான். நான் அதை நம்பவில்லை. அவன் வீட்டை விட்டுச் சென்று லண்டனில் ஒரு மாடியில் ஒரு பெண்ணுடன் சோரம் போய்க்கொண்டிருந்தான்."

#### டாக்டரின் சோரம்

ஸ்ரீமதி டோபிடீனர், அவளது புருஷனை டாக்டரை ரத்துசெய்து விடுமாறு கோரினாள். காரணம்:- "எனக்கும் என் புருஷனுக்கும், அவர் வைத்தியர் பட்டம் பெறு முன்னமேயே, விவாகம் நடந்தது. அவர் பர்மிங்ஹாமில் சோரஞ் செய்தார்.

#### செப்டம்பரில் விவாகம் நவம்பரில் சோர நாயகி

ஸ்ரீமதி பக்லர் அவளது புருஷனை ரத்து செய்ய வேண்டினாள். காரணம்:—

"1934-ஆம் வருடம் செப்டம்பர் மாதம் எங்களுக்கு விவாகம் நடந்தது. ஆனால், அதே நவம்பரில் என் புருஷன் காணமற் போய்விட்டான். தேடிப் பார்த்ததில், அவன் பிங்க்ஹாம் என்ற இடத்தில் ஒருத்தியைச் சோர நாயகியாக வைத்துக் கொண்டிருந்தான்."

#### ஒரே நாள் தம்பதிகள். பின்னர்பிரிவு

வில்லியம் பிரான்சிஸ் என்ற மோட்டார் டிரைவர் ஒரு பெண்ணை இரகசியமாகக் கலியாணஞ் செய்துகொண்டான். அவர்கள் ஓரிரவு ஒன்றாயிருந்தனர். பின்னர் பிரிந்தனர். பிறகு, அப்பெண் மற்றொருவனுடன் வேறிடத்தில் விபசாரஞ் செய்து கொண்டிருந்தாள்,

#### கிளப்பில் சோரம்

ஸ்ரீமதி எம்மா சிம்ஸன் அவளது புருஷனை விவாக ரத்து செய்து விடுமாறு கோரினாள். காரணம்: "என் புருஷன் கென்வே கிளப்பில் ஓர் இளம் பெண்ணுடன் சோரம் போனான்."

#### இரவில் சோரம்

ஜான் லெஸ்லீ கர்னி தனது மனைவியை விலக்கக் கோரினான். காரணம். "எனக்கு இரவில் வேலை பார்க்கும் உத்தியோகம். நான் இரவில் வேலைபார்க்கச் செல்லும் பொழுதெல்லாம் என் மனைவி அவளது நாயகனை என் வீட்டிற்கு வரவழைத்து, அவனுடன் விபசாரஞ் செய்து கொண்டிருந்தாள்."

இம்மாதிரி 465 விவாக ரத்து வழக்குக்களில் டிக்ரீ கொடுக்கப்பட்டு விட்டது.

















## சமூக சத்யாக்கிரகம்

தி. நாராயணன்.

இப்பொழுது பத்திரிகைகளில் நாம் சமூக சீர்திருத்தத்தைப்பற்றி பல வியாசங்களைப் பார்க்கிறோம். அவைகளைச் செய்வதென்று பல பத்திரிகைகள் தோன்றுவதும் மறைவதுமாய் இருக்கின்றன. இனி வாய்ப்பேச்சில் பிரயோஜனமில்லை. செய்கையில் காட்டவேண்டும். இதற்கு என்ன வழி என்பதைத் தேடவேண்டும்.

### அன்பு வழி

ஏன் அதிகதூரம் தேடுகிறாய். நமது தலைவர் மகாத்மா நமக்குக் காட்டியிருக்கும் முறையை ஏன் பின்பற்றக்கூடாது. உன் மனதில் எழும் சக்தியை உன் தன்னம்பிக்கையினால் தீர்க்க மாட்டாயா? இதற்கு ஆயுதம் வேண்டாம். ஒருவரை ஒருவர் நிந்திக்கவேண்டாம். நமது இலட்சியத்தை நாம் எடுத்து நன்றாய் விளக்கிவிட்டு, காரியத்தைச் செய்ய முற்பட வேண்டியது.

### எப்படி ஆரம்பிப்பது?

இப்பொழுது சமூகத்தில் திருத்த வேண்டியது பல. சமூகச் சடங்குகள், மூடநம்பிக்கைகள், ஜாதி வித்தியாசங்கள், பெண்களின் நிலைமை முதலியவைகள். இவைகளில் ஒருவிஷயத்தை எடுத்துக்கொண்டு நாம் சத்யாகிரகம் ஆரம்பித்தாலேபோதும். முதலில், பெண்கல்வியை எடுத்துக்கொள்வோம். நமது பெண் படிக்கிறாளா? அல்லது நமது சகோதரிகள் படிக்கிறார்களா? என்று கவனி. அவர்கள் படிக்கவேண்டும் என்பதை நீ எடுத்துக்காண்பி. அவர்களைப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பச்சொல். மாட்டேனென்றால் நாமே கூட்டிக்கொண்டுபோய் விடலாம். அப்படியும் மறுத்தால் நீ அவ்விடத்தில், முதலில் யார் மறுக்கிறார்களோ, அவர்களுடைய சம்பந்தத்தை நிறுத்து. அவர்கள் செய்யும் எக்காரியத்திலும் கலந்து கொள்ளாதே. ஆனால் அவர்களை நிந்திக்காதே. இந்த ஒரு செய்கையினாலே எவ்வளவு மாறுதல்கள் நடக்கும் என்பதைப்பார். இதேமாதிரி இன்னும் மற்ற விஷயங்களிலும் யோசித்துச் செய். ஆகையால் பாடுபடாமல், சிறிதுகூட முன்போகமுடியாது.

### 'மெதுவாகப் போதல்'

சிலர், 'மெதுவாகச் செய்யலாம்' 'மெதுவாகச் செய்யலாம்' என்று காலத்தைக் கடத்தப் பார்க்கிறார்கள். அது மிகவும் கீழான யோசனை. 100-க்கு 90 பேர் படிக்காமல் இருந்த ருஷியா தேசத்தில், இந்தப் பதிமூன்று வருடத்திற்கிடையில், 100-க்கு 80 பேர் படிக்கும்படி செய்திருக்கிறார்கள். ஆகாயவிமான உலகத்தில், ஆமை நகருவதைப் போல் நகரும் சீர்திருத்தங்களைப் பார்த்து, நாம் மகிழ்ந்து விடக்கூடாது. நீ நோவாமல் அடி நான் ஓயாமல் அழுகிறேன் என்ற பழமொழிக்கு இலக்காகச் சீர்திருத்தத்திலும் வெளிக்குச் செய்கிறாற் போல் காண்பித்து உள்ளூர பழைய பழக்கங்களையே பிடித்துக் கொண்டுவந்தால் ஒன்றும் பிரயோஜன மில்லை.

### இளைஞர்களின் சோம்பல்

ஆகையால் இளைஞர்கள் தங்கள் சோம்பலை உதறித்தள்ளி திருத்த வழி காட்டும் பாதையில் முன்வர வேண்டும். எண்ணியதைத் தீரமாக முடிக்கும் வழியில், யோசனைகள் செய்யவேண்டும். கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசை என்ற வழியில் போகாமல், 'சமூக சத்யாக்கிரகங்கள்' ஆரம்பிக்க வேண்டும். சில புதிய முறைகளை வகுத்துக்கொண்டு அதன்படி நடக்க முன்வர வேண்டும். புதிய உலகத்தின் மக்களாகிய இளைஞர்கள் சிறிது தியாகம் செய்ய பயப்பட்டால், ஏன் சமூக சீர்திருத்தத்தைப்பற்றி எழுதுவானேன் வெள்ளைக் கடிதத்தை கருப்புக்காகிதம் ஆக்கவா எழுதுவது? ஆகையால் பின்வரும் விஷயங்களில் எல்லோரும் ஒரு மனப்பட்டு சத்தியாக்கிரகம் ஆரம்பிக்க வேண்டும். அதற்கு தன்னம்பிக்கையும் திடபுத்தியும் வேண்டும். தன்னம்பிக்கை இல்லாத இளைஞன் இருந்து தான் என்ன பிரயோஜனம்.

### செய்கையில் காட்டவேண்டிய விஷயம்

1. சுவாமி கோயிலில் ஆடு வெட்டும் வழக்கத்தை நிறுத்தவேண்டும். நம் வீட்டில் அப்படிச் செய்தால், நாமே தடுத்தல். மீறிச் செய்தால், நாம் கலந்து கொள்ளாமல் இருத்தல்.

2. வேண்டாத சடங்குகள் நடத்தும் இடங்களுக்கு நாம் போகக் கூடாது. அவைகளையும் எந்த விதத்திலும் ஆதரிக்கக் கூடாது.

3. இளமையில் நடக்கும் கல்யாணத்திற்குப் போகக் கூடாது. எவ்வளவு பணம் செலவழித்து பாட்டுக்கச்சேரி, சதுர்கள் வைத்தாலும் எட்டிப் பார்க்கக் கூடாது.

4. மாதர் மறுமணத்தை ஆதரிக்க வேண்டும். அதில் நாம் கலந்துகொண்டு பூர்ண ஆதரவைக் கொடுக்கவேண்டும்.

5. ஜாதி வித்தியாசமே காட்டக் கூடாது. மனிதன் குணத்தினால் உயர்ந்தவன். பிறப்பினால் அல்ல என்பதைக் காட்ட எல்லோருக்கும் வேலை கொடுக்கவேண்டும். ஒரு வேலைக்கு ஆதிதிராவிடன் சக்தியுள்ளவனாய் இருந்தால், நாம் கட்டாயம் அவனை வைத்துக் கொள்ள வேண்டும்.

இன்னும் இவை போன்ற பல விஷயங்களில் நாம் பயப்படாமல் முன் அணியில் நின்று சமூகப் புரட்சி ஏற்படுத்தவேண்டும். இதற்கு தயார் செய்து கொள்ளுங்கள்.

## உவாக்கமா செட்டியார் சங்கம்

(ஒரு நிருபர்)

6—2—36உ மாலை 4–30மணிக்கு திரு. சிவ. பள. மு. ராமஞ் செட்டியாரவர்கள் தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது. தலைவர் அவர்கள் முன்னுரை கூறும்பொழுது இப்போது நமது சமூகம் இருக்கிற நிலையிலே நாம் மிகக் கஷ்டப்பட்டேனும் முன்னேற்றமடைய வேண்டியவர்களாயிருக்கிறோம். சமூகச் சடங்குகள் நமது சமூகத்தை மிகக் கஷ்டப்படுத்திக் கொண்டிருக்கின்றன. அவற்றில் வேண்டாதவற்றைத் தள்ளி மற்ற சடங்குகளிலும் கூடுமானவரை சுருக்கமாகவும் சிக்கனமாகவும் நடத்துவதற்கு முயற்சி செய்யவேண்டியது மிக முக்கியமும் அவசரமுமாகும். உதாரணமாக திருவாதிரைப் புதுமை, கார்த்திகைப்புதுமை, இவற்றை அறவே நீக்கிவிடுவதால் ஒன்றும் தீங்கு நேரிடப் போவதில்லை. காப்புக்கட்டுப்புதுமையை ஒரு நாளாகவும் கல்யாணத்தை மூன்று நாளாகவும் நாட்களைச் சுருக்கி சிக்கமான முறையிலே அனுவசிய ஆடம்பரச் செலவுகளின்றி நடத்துவதால் நம் சமூகம் மிக நன்மையடையும். நான் மேலே குறிப்பிட்டவற்றைச் செய்ய ஒவ்வொருவரும் விரும்புவார்கள். ஆனல் யார் முதலில் இந்த திருத்தத்தை செய்வது என்பதுதான் சந்தேகமாயிருக்கலாம் என்றாலும் இந்த திருத்தம் நம் சமூகத்திற்கு மிக முக்கியமானதாகும். நம் சமூகப்பெரியார்கள் பெருந்தன்மையோடு இதைச் செய்ய முன்வரவேண்டுமென்று கேட்டுக்கொள்கின்றேன். திருத்தமான முறையிலே சடங்குகளை நடத்த முன் வருபவர்களைப் பொதுவாகத் தமிழ்நாடும் சிறப்பாக செட்டியார்கள் சமூகமும் போற்றுமென்பதில் சந்தேகமில்லை. இளைஞருலகமும் வருங்காலத் தனவணிகருலகமும் இப்பெரியார்களை யென்றென்றைக்கும் மறவாத நன்றியுடன் போற்றும் ஆகையால் நல்ல முறையிலே தைரியத்தோடு வழிகாட்டும்படியாகப் பெரியார்களைக்கேட்டுக்கொள்கிறேன் என்று குறிப்பிட்டார்கள். திருவாளர்களான நா. சுப்பிரமணியன், கரு. நாச்சியப்பன், செ. சுப்பிரமணியன், கண. மு. மு. சாத்தப்ப செட்டியார், சொ. கண. முத்தய்யா, முதலியோர் முறையே புலால்மறுத்தல், மானிடப்பிறவி, சீர்திருத்தம், சங்கங்கள், அரசியல், என்பனபற்றிப்பேசினர்கள். இரவு $7\frac{1}{2}$ மணிக்குத் தலைவர் முடிவுரை கூறியதின் பின் காரியதரிசியால் வந்தனேபசாரம் கூறப்பட்டுக் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

### மற்றொரு கூட்டம்.

இச்சங்கத்தின் இரண்டாவது மாதக்கூட்டம் 4–2–36ல் நடைபெற்றது. திருவாளர். உல. க. கண. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்கள் கூட்டத்துக்கு தலைமை வகித்தார்கள். திருவாளர்களான மு. பெ. மு. சா. சுவாமிநாதன் செட்டியார், சொ. கண. முத்தையா, நா. சுப்பையா இவர்கள் முறையே "சங்கத்தின் அவசியம்" "சீர்திருத்தம்" 'கல்வி' என்பதுபற்றி விரிவாகவும் அழகாகவும் பேசினர்கள். காரியதரிசியால் வந்தனேபசாரம் கூறப்பட்டு $7\frac{1}{2}$ மணிக்கு கூட்டம் இனிது நிறைவெய்தியது.

### நன்கொடை

புதுவயல் ஸ்ரீ சரஸ்வதி சங்கத்தின் அங்கத்தவரும் ஸ்ரீ சரஸ்வதி வித்தியாசாலையின் போஷகரில் ஒருவருமான திருவாளர் பெரி. வீர. ராம. பெரியணன் செட்டியாரவர்கள் தமது புதல்வி திருவளர் செல்வி சொலைச்சிக்கு சென்ற மாதம் 18-ம் நாள் நடந்த திருமணத்தில் நமது ஸ்ரீ சரஸ்வதி சங்கத்துக்கு ரூ. 11 நன்கொடை தந்துள்ளார்கள். அவர்கட்கு நமது நன்றி உரியதாகுக என காரியதரிசி அறிவிக்கிறார்.



## யுத்த ஆரம்பம்

### இத்தாலியின் படை பலம்

எதியோபிய—இத்தாலிய யுத்தம் ஆரம்பித்த சமயத்தில், இத்தாலி எதியோபியாவில் எவ்வளவு படை பலத்துடன் இருந்ததென்பதும், அது கொண்டுபோன சாமான்கள் எவ்வளவென்பதும், சூயெஸ் கால்வாய் கம்பெனி வெளியிட்டிருக்கும் விவரத்திலிருந்து அறியக்கிடக்கின்றன:—

1935 ஜூன் 25-ந் தேதியிலிருந்து டிசம்பர் 25-ந் தேதி வரை சூயஸ் கால்வாய் வழியே 445 இத்தாலியச் சாமான்கள் ஏற்றிச் செல்லும் கப்பல்கள் சென்றிருக்கின்றன.

| | | |
|---|---|---|
| ஆட்கள் (ஸோல்ஜர்களும் வேலைக்காரர்களும்) | | 2,46,361 |
| கழுதைகள் | | 24,287 |
| ஒட்டகங்கள் | | 770 |
| லாரிகள் | | 1481 |
| ஆகாய விமானங்கள் | | 268 |
| இறைச்சி | டன்கள் | 19,000 |
| கத்தக மண் | „ | 4,491 |
| சிமிட்டி | „ | 11,775 |
| வைக்கோல் | „ | 44,496 |
| மரம் | „ | 33,490 |
| நிலக்கரி | „ | 39,655 |
| யுத்த மருந்துகள் | „ | 40,343 |
| குடி தண்ணீர் | „ | 9,000 |
| மெஷீன் எண்ணெய் | „ | 8,298 |
| எண்ணெய் | „ | 27,820 |
| பெட்ரோல் | „ | 9564 |
| ஆயுதங்கள் | „ | 2.50,757 |
| வெடிகுண்டுகள் | „ | 7,483 |
| வெடி மருந்துகள் | „ | 29.009 |
| தீப்பெட்டிகள் | „ | 1660 |
| மதுபானங்கள் | „ | 13,309 |

அதே காலத்திற்குள் 338 கப்பல்கள் எதியோபியாவிலிருந்து திரும்பி ரோம் சென்றிருக்கின்றன. அக்கப்பல்களில் 35,697 பேர் நோய் பீடித்தவர்களாகவும், காயமடைந்தவர்களாகவும், வேலைக் கால ஒப்பந்தம் முடிந்தவர்களாகவும் இருந்தவர்கள் ரோமுக்குத் திரும்பிச் சென்று கொண்டிருந்தனர்.

### கண்டவராயன்பட்டி மனோன்மணி விலாஸ்

யுவ-ஹு மாசிமீ 2உ மாலை 4 மணிக்கு நகரவிடுதியிலிருந்து பழ. கரு. ஊரணிக் கரையில் ஸ்தாபித்திருக்கும் மனோன்மணி விலாஸ் பந்தடிமாலுக்கு மேளவாத்தியங்களோடு வந்து 4-30-க்கு திருவாளர் வி. சி. பழ. பழநியப்ப செட்டியார் அவர்கள் திறந்துவைத்தார்கள். வந்திருந்தோரனைவரையும் திறப்பாளரையும் அரு. சி. அழகப்ப செட்டியார் அவர்கள் வரவேற்றார்கள். மு. வள்ளியப்பா அவர்களால் உபசரிக்கப்பட்டு தாம்பூல சந்தண மலர்கள் வழங்க 7 மணிக்குக் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

பம்பாயில் 20,000 டன் சீயம் அரிசி இறக்குமதியாகியிருக்கிறது.

### சித்தானூரில் காவடி எடுப்புக்கு 144

(நமது நிருபர்)

சித்தானூர் அய்யனுர் கோயிலில் சிவராத்திரி உத்ஸவத்தை முன்னிட்டு ஷெயூர் ஆதித்திராவிடர்கள் சாம்பிராணிக்காவடியும் நாட்டார்கள் மயில் காவடியும் எடுப்பது சம்பந்தமாக இருகாப்பாருக்கும் நெடுநாளாக மனஸ்தாபங்கள் இருந்துவருவதனல் தேவகோட்டை சப் இன்ஸ்பெக்டர் அவர்களின் மனுவின்பேரில் தேவகோட்டை ஜாயிண்டு மாஜிஸ்டிரேட் அவர்கள் ஒருவருமே காவடிகள் எடுக்கக்கூடாதென்று தடையுத்தரவு வெளியிட்டார்கள். அவ்வுத்தரவுக்கிணங்க 21, 22உ நளில் காவடி எடுக்கவில்லை.

### எஸ். சொக்கனுதபுரம் விவேகானந்த வாசகசாலை

சீனமங்கலம் ஸ்ரீமான் வடி. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் புதல்வன் திருவாளர் செல்வன் இராமனுதனுக்கும் கருங்குளம் லெ. வயி. லெட்சுமணன் செட்டியாரவர்கள் புதல்வி திருவளர்செல்வி சொர்ணவல்லிக்கும் தைத் திங்கள் 23-ம் நாள் நடைபெற்ற திருமணத்திற்கு இவ்வூர் விவேகானந்த வாசகசாலைக்கு முறையே ரூ. 2 ம் ரூ. 3 ம் இவ்வூர் ஸ்ரீமான் சுப. ஆ. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் புதல்வன் திருவளர்செல்வன் அண்ணமலைக்கும் சூரைக்குடி அரு. நாகப்ப செட்டியாரவர்கள் புதல்வி திருவளர் செல்வி விசாலாட்சிக்கும் நடைபெற்ற திருமணத்திற்கு முறையே ரூ. 5 ம் ரூ. 3 ம் ஷண்முகனுதபட்டணம் ஸ்ரீமான் க. ந. ராம. வயிரவன் செட்டியாரவர்கள் புதல்வி சௌபாக்கியவதி வள்ளியம்மைக்கு தை திங்கள் 28-ம் நாள் நடைபெற்ற காப்புக்கட்டுப் புதுமைக்கு ரூ. 2 ம் நன்கொடை அளித்துள்ளார்கள்.

ஆகவே அவர்களுக்கு வாசகசாலை சார்பில் நன்றி பாராட்டுவதோடு இளந்தம்பதிகள் நல்ல தேகாரோக்கியம் திரவிய சம்பத்து புத்திரப்பேற்றையும் பெற்றுய்யுமாறு எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிவாராகுக என்று உப காரியதரிசி ஆதி. இராமசாமி அறிவிக்கிறார்.

இன்னும் பிரிவினையாகாத ஜில்லா போர்டுகளின் பொருளாதார நிலைமையைப்பற்றி விசாரணை நடத்த டிப்டி கலெக்டர் திரு. டி. எஸ். ராஜமய்யாவை ஸ்பெஷல் ஆபீஸராக சர்க்கார் நியமித்திருக்கிறார்கள்.

Printed and Published by N. VEERAPPAN for Dhana Vysian Company Ltd, at the Kumaran Power Press, Karaikudi. (S. INDIA.)

